


மைத்தான் ஏஸி, பாக்ரா டீஸி 900 மிமீ, 1200 மிமீ, 1400 மிமீ, 1500 மிமீ.



டிலக்ஸ் 400 மிமீ மேஜை மாடல்

- கழட்டக்கூடிய வலைக்கூண்டு
- இஷ்டமான கோணத்தில் பொருத்தி, இருபுறமும் திரும்பி வீசக்கூடியது.
- மிகச்சரியான அடிகளும் சம நிலையுமுள்ள அலுமினியம் பிளேடுகள்
- மூவகை வேகம்
- ஒரு சில நிறங்களில் எனாமல் பூச்சு.

# AEI

# ஸீலிங்
## மற்றும்
# மேஜை விசிறிகள்

மிகுந்த சக்தியுடையதாக, குறைந்த மின்சாரச்செலவே ஆகும்படி அமைக்கப்பெற்ற ஏஇஐ ஸீலிங் மற்றும் மேஜை விசிறிகள், பொறுக்கியெடுத்த சிறந்த உறுப்புக்களைக் கொண்டு நிர்மாணிக்கப்படுவதாகும். ஏஇஐ விசிறிகளின் தயாரிப்பில் தொழில் நுட்பத் திறமையுடன், இந்தியாவின் மிகப்பெரிய மின்சார சாதன சப்ளை ஸ்தாபனத்தின் விசேஷ ஆற்றலும் அனுபவமும் கூடியிருக்கிறது.

**அஸோஸியேடட் எலக்டிரிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரை. லிட்.**
கிரௌன் ஹவுஸ்; 13, ராஜேந்திரநாத் முகர்ஜி ரோடு, கல்கத்தா-1.
கிளைகள்: பம்பாய் - புதுடில்லி - மதராஸ் - பெங்களூர் - கோயமுத்தூர் - நாகபுரி.

AEI-47A TAM







Khira

சுபகிருது, மாசி௴ 12உ




பிப்ரவரி, 24உ 1963

## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## புசிக்கவும் ஆசை, புகைக்கவும் ஆசை?




சம்பிரதாய விருந்துகளின்போது புகைபிடிப்பது இக் காலத்திலே விலக்கல்ல. வசதி அளிக்கப் பெற்றிருப்பின், உணவருந்தும் போது தாராளமாக நீங்கள் புகை பிடிக்கலாம். எங்கே சிகரெட் இடம் பெறவில்லையோ அன்றி வழங்கப்பெறவில்லையோ அங்கே நாமாக சொந்த சிகரெட்டைப் பற்றவைக்காமலிருப்பதே பண் பாட்டுக்கு அடையாளம்.

உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

Panama
20
CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம்
இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 442 TAM.  Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 30

# இனியேனும் விழிப்புற வேண்டும்

சீனாவின் ஆக்கிரமிப்பு நாம் உலகில் பெற்றிருந்த அந்தஸ்தை அடியோடு வீழ்த்தி விட்டது. மானபங்கமடைந்த நாடாக இன்று நாம் நிற்கிறோம். இந்தியாவில் ராணுவ நிர்வாகம் எவ்வளவு மோசமாக நடக்கிறது என்பது இன்று உலக நாடுகளுக்கெல்லாம் வெட்டவெளிச்சமாகி விட்டது. நம்முடைய ராணுவத்தின் பலவீனமும், அந்தப் பலவீனத்தை அடுத்து ராஜதந்திரத்தில் நாம் அடைந்த தோல்வியும் பகிரங்கமாகி விட்டன.

இது போதாதென்று பொருளாதாரத்தில் தான் அடைந்துள்ள படுதோல்வியையும் சர்க்கார் வெளிப்படுத்திவிடப் போகிறது. பனிப் போரில் நடுநிலைமை வகிப்பதாகச் சொல்லிக் கொண்டு இரு கோஷ்டி வெளி நாடுகளிடமிருந்தும் உதவி பெறலாம் என்ற கொள்கையின்மீதுதான் திட்டங்கள் உருவாயின. பாதுகாப்புத் துறையில் நம்முடைய செலவைப் பெருக்க வேண்டும் என்ற நிலைமை இப்போது உண்டாகியிருப்பதால் படாடோபத் திட்டங்களுக்கு ஆபத்து வந்து விட்டது. என்றாலும் அதை மூடி மறைக்கப் பார்க்கிறார்கள். 'ராணுவத்தில் நாமே நம் தேவையைப் பூர்த்தி செய்து கொள்வோம்; அதே சமயத்தில் திட்டத்தையும் கைவிடமாட்டோம்' என்று வீம்பு பிடித்துப் புதுப்புது வரிகளைப் போட முனைந்து நிற்கிறது அரசாங்கம். தங்கத்தையெல்லாம் கரியாக்கிச் சர்க்கார் கஜானாவில் சேர்க்க முடிவு செய்திருக்கிறது. கழுத்து நெரியுமளவுக்கு ஏற்கெனவே வரி விதிக்கப்பட்ட மக்களின் சுமையை மேலும் அதிகமாக்கப் போகிறது. அடுத்த ஆண்டில் சர்க்காரின் வருமானத்தைப் பெருக்குவதற்காக இப்போது சர்க்கார் எடுத்திருக்கும் முடிவுகள் அதன் கையாலாகாத்தனத்தையும், தோல்வியையும் ஸ்பஷ்டமாக நிரூபித்துவிட்டன. நாடு மோசநிலைமைக்கு வந்துவிட்டது என்பதை வாதப்பிரதிவாதங்களால் விளக்குவதைவிட நிதி மந்திரியின் யோசனைகளே தெளிவாக உடைத்துக் கூறுகின்றன.

தங்களுடைய எதிர்காலத்துக்காக மக்கள் சேமித்து வைத்துக் கொண்ட தங்கம் விவசாயத்துக்கும் சிறு தொழிலுக்கும் அடகு வைத்துக் கடன் வாங்க உதவிற்று. இதன் மூலம் நாட்டின் பொருளாதாரம் சீர்குலையாமலிருக்கவும் உதவிற்று. தங்கத்தின் மதிப்பைத் திடீரெனக் குறைக்கும் அநீதமான சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறது சர்க்கார். இதனால் தங்க நகைகளில் முதலீடு செய்திருந்த கோடிக்கணக்கான கிராம மக்களுக்குப் பெரிய நஷ்டம் உண்டாக்கியிருக்கிறது சர்க்கார். சர்க்காரின் பத்திரங்களைவிடவும், பாங்கில் பணம் போடுவதை விடவும் தங்கத்தை வாங்கி வைத்துக் கொள்வதுதான் புத்திசாலித்தனம் என்பதைப் பட்டறிவால் உணர்ந்துதான் மக்கள் தங்கம் வாங்கும் பழக்கத்தை மேற்கொண்டார்கள். பாங்கு விதிமுறைகள் புரியாத கிராம மக்களுக்குத் தங்கமே பாங்காக இருந்தது. இப்போது கள்ளக்கடத்தலைக் குறைப்பதாக எண்ணிக்கொண்டு, முன் யோசனையற்ற சட்டத்தை அரசாங்கம் கொண்டு வந்திருக்கிறது. சர்க்காரின் பணவீக்கக் கொள்கையால் எல்லாப் பண்டங்களும் விலை கூடியிருப்பது போலத் தங்கத்தின் விலையும் ஏறியிருப்பதால்தான் கள்ளக்கடத்தல் நடக்கிறது. எனவே தங்கக் கடத்தலைக் குறைக்க வழி பணவீக்கத்தைக் குறைப்பதுதானே ஒழிய கட்டுப்பாட்டுச் சட்டங்களல்ல. அல்லது சர்க்காரே அந்த அளவுக்குப் பகிரங்கத் தங்க இறக்குமதிக்கு வழி தேடவேண்டும். சர்க்காரின் புதுத் தங்கக் கட்டுப்பாடுகள் மக்களை வதைக்கும் வழி. இதைக் கைவிட்டேயாகவேண்டும்.

சீன அபாயம் நிரந்தரமானது என்று உறுதியாகியுள்ள இத்தருணத்தில் சர்க்காரின் வருமானத்தை மேலும் மேலும் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகச் செய்யும் காரியங்கள் மக்களின் தேசிய எழுச்சியையே குலைத்து வருகின்றன. இப்போதேனும் அரசாங்கம் விழித்துக்கொள்ளாவிடில் அதோகதி அடைவோம்.

# மோகினி அவதாரம்

கொழும்புத் திட்டத்தால் இந்தியாவுக்கு ஒரு நன்மையும் கிடைக்காது. நேரு அவர்கள் சீனாவுடன் பேச்சு வார்த்தை நடத்தத் தொடங்கினால் நிச்சயமாக எதிராளி இழுத்த இழுப்புக்கு வளைந்து கொடுக்க வேண்டியதாகும். இதை ராஜாஜி ஏற்கனவே எச்சரிக்கை செய்திருக்கிறார். நேருஜி இப்படிச் செய்தால்தான் கம்யூனிஸ்ட்டுகளுக்கு நல்லது. எனவே, உலகிலுள்ள பல கம்யூனிஸ்ட் நாடுகள் இப்போது சீனாவைக் கண்டிப்பது போலப் பேசி வருகின்றன. அவை உண்மையில் சீனாவின் ஆக்கிரமிப்பை எதிர்க்கவில்லை. இந்த ஆக்கிரமிப்புக் காரணமாக எங்கே இந்தியா மேற்கத்திய வல்லரசுகளுடன் கூட்டுச் சேர்ந்து விடுமோ, கம்யூனிஸ விஸ்தரிப்புத் திட்டம் பலிக்காமல் போய்விடுமோ என்ற எண்ணத்தின்மீதே அவை சீனாவைக் கண்டிக்கின்றன. குருஷேவ் ஆரம்பத்திலேயே இப்படிப் பயந்தார். இன்று மற்ற நாடுகளும் அவரோடு சேர்ந்து கொண்டு விட்டன.

இந்தியாவின் தேச நலனுக்கு எது உகந்ததோ, அதற்கு நேர்மாறான வழியையே கம்யூனிஸ்ட்டுகள் கட்டிக் காட்டுகிறார்கள். இதைக் கண்டு சர்க்கார் ஏமாந்து போகக்கூடாது. ''இந்தியா—சீனா தகராறு 'நீண்ட நாட்களுக்கு'த் தொடரும். இது வெறும் பிரதேச உரிமைப் பிரச்னை மட்டுமல்ல'' என்றெல்லாம் கூறும் பிரதமரவர்கள் தாம் நிலவரத்தைப் புரிந்து கொண்டிருப்பதைக் காரியத்தில் காட்ட வேண்டும். இந்தியா—சீனா தகராறு இனி தீராத அபாயம் என்பதை உணர வேண்டும். இந்த அபாயத்திலிருந்து நம்மைக் காத்துக் கொள்ள மேல்நாட்டு வல்லரசுகளுடன் கெட்டியான ஒப்பந்தம் செய்து கொள்வதொன்றே வழி என்பதை நேருஜி ஏன் இன்னும் உணரவில்லை? கம்யூனிஸப் போராசையைத் தடுக்க வேறு என்ன உபாயமிருக்கிறது என்று அவர் தேடுகிறார். 'ஏன் சீனாவுடன் பேச்சு வார்த்தை நடத்தக் கூடாது?' என்று பேசிப் பேசியே காலம் கடத்தி, மக்களின் உற்சாகத்தைக் குன்றிப் போகுமாறு செய்வது நல்லதல்ல.

தங்களுடன் இந்தியா கூட்டுச் சேர வேண்டும் என்று மேல்நாடுகள் விரும்பிய காலம் மலையேறிவிட்டது. அவர்களுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டியது இன்று நமக்குத்தான் அவசியமாகும். நம்முடைய பலமின்மையைப் போக்கிக் கொள்வதில் அவமானம் எதுவும் இல்லை. எதிரியுடன் பேச்சு வார்த்தை நடத்த இன்னும் முற்படுவதுதான் அவமானமாகும்.

கம்யூனிஸ்ட் நாடுகளிடையே பிளவிருப்பதாக எண்ணி மாய மானைப்






தர்மவியாதர் என்பவர் கசாப்புத் தொழில் நடத்திவந்த இதிகாச பாத்திரம்.

---

பிடிக்க ஆசைப்படுவதில் பயனில்லை. 'சீனவுக்கும், ருஷ்யாவுக்கும் உள்ள பேதத்துக்கும் இந்திய எல்லைப் பிரச்னைக்கும் சம்பந்தம் இல்லை. ருஷ்யாவுக்கும் சீனவுக்கும் உள்ள வேறுபாடுகள் எங்களுடைய எதிரிகளுக்குப் பயன்படாது' என்று குருஷேவ் ஐயமறக் கூறிவிட்டார். கம்யூனிஸ நாடுகளைப் போலவேதான் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளுக்கும் நியாயத்தில் அக்கறையில்லை. மேற்கத்தியவல்லரசுகளின் உதவியை நாம் நாடக்கூடாது என்கிற ஒரு கருத்துத்தான் அவர்களுடைய எண்ணத்தில் பதிந்திருக்கிறது. தவருன பாதையில் நம்மைத் தள்ளிக் கொண்டு போக முயற்சி செய்யும் இந்த மோகினி அவதாரங்களைக் கண்டு இந்தியா மயங்குகிறது. மோஷி மகாநாட்டில் இந்தியா கலந்து கொண்டது மிகவும் துர்ப்பாக்கியமாகும். சீன — இந்தியப் பிரச்னைக்கான தீர்வு இலங்கையிலோ, டாங்கனிகாவிலோ இல்லை. பேச்சுவார்த்தை நடத்த வேண்டும் என்று கூறி நல்ல வழியில் நம்மைப் போக விடாமல் தடுக்கும் நாடுகள் அவை. எனினும் அவற்றின் யோசனைகளைத்தான் அரசாங்கம் வரவேற்கிறது. சரிவில் செல்வது சுலபமாக இருக்கலாம். ஆனல் அது ஆழம் காணமுடியாத படுகுழிக்குத்தான் இட்டுச் செல்லும்.



# என்ன சேதி?

## ஆட்சி மொழி விஷயம்

**வ**ருகிற மக்கட் சபைக் கூட்டத்தில் ஆங்கிலத்தை 1965ம் ஆண்டுக்குப் பின் னரும் ஆட்சி மொழியாக நீடிக்கவைக் கும் மசோதாவைக் கொண்டுவரப்போவ தில்லை என்று செய்திகள் கூறுகின்றன. அவசரமாக எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்யாமல் எதைச் செய்ய வேண்டிய அவசரமில்லேயோ அதைச் செய்வதே இன்றைய காங்கிரஸ் சர்க் காரின் நடைமுறைக் கொள்கையாகி விட்டது. ஜவாஹர்லால் நேரு அவர்கள் பிரதமராக இருக்கும்போதே, அவர் செல்வாக்கைப் பயன்படுத்தி ஆங்கிலத் துக்கு உரிய ஸ்தானத்தை ஸ்தாபிக்கா விட்டால் எதிர் காலத்தில் தேசம் பின்னடைந்து நிற்க ஏதுவாகும். பிரிவினே கோரும் கட்சிகளைச் சட்ட மூலம் தடை செய்து விட்டால் அக் கிளர்ச்சி நின்று போகும் என்று இன்றைய ஆட்சி யாளர்கள் நினைத்தால் அது அவர்களது அரசியல் ஞான சூன்யத்தைத்தான் காட்டுகிறது. பிரிவினைக் கட்சிகள் வளர்வதற்கு ஊட்டமாக இருக்கும் காரணங்களை அகற்ற வேண்டும். ஹிந்தி ஆட்சி மொழிச் சட்டத்தைத் திருத்தி ஆங்கிலம் தொடர்ந்து ஆட்சி மொழி யாக இருக்க வசதி செய்தாலன்றித் தேசத்தின் ஐக்கியம் அழிந்து போகும்.

## மாஜி மந்திரியின் கருத்து

"**எ**ன்னுடைய அபிப்பிராயத்தில், விவசாயச் 'சீர்திருத்தங்கள்' விவசாயி களுக்கு எந்த விதமான பயனையும் அளிக்கவில்லை. அதற்கு மாறாக உற்பத்தி யைப் பெரிதும் பாதித்திருக்கின்றன!'' என்று யாரோ சமீபத்தில் சொன்னார் என்றால் அவர் சுதந்திரக் கட்சித் தலைவர் தான் என எண்ணிவிடாதீர்கள். மாஜி விவசாய மந்திரியான ஸ்ரீ பஞ்சாப் ராவ் தேஷ்முக் அவர்களே இம்மாதிரி கூறி யிருக்கிறார்.

இப்போதும் காங்கிரஸ் கட்சியில் இருப்பவரும் காங்கிரஸின் விவசாயக்



## புவனம் பிறந்த தினம்



சிவராத்திரியைக் குறித்துப் பல வரலாறுகள் உண்டு. அவற்றிலொன்று, பிரளய காலத்துக்குப் பின் தேவி தவமிருந்து ஐயனின் தரிசனம் பெற்ற இரவே சிவராத்திரி எனக் கூறும். இந்த அற்புதக் காட்சியையே நம் அட்டைச் சித்திரத்தில் வனப்புற வரைந்துள்ளார் ஓவியர் வினு.

அழிந்துபோன புவன மண்டலங்களையெல்லாம் மீண்டும் தான் பெற்றெடுக்க வேண்டுமென அம்பிகை அன்று அத்தனிடம் வரம் கேட்டு, அது பலிதமாகப் பெற்றாள். ஒன்றேயான மெய்ப்பொருளில் லயித்த ஜீவகோடிகளைத் தேவி ஏன் மீண்டும் சம்சார சாகரத்துக்கு ஆட்படுத்த வேண்டும் என்ற வினா எழுகிறது. அதுவே அவள் மனித குலத்திடம் வைத்துள்ள அளப்பரிய நன்னம்பிக்கையைக் காட்டுகிறது. சம்சாரத் தளையை விலக்கிக் கொள்ளும் திரம் தங்களுக்கு உண்டு என்று மக்கள் நிரூபித்துக் காட்டவும், முயற்சியின் மூலம் அவர்கள் மீண்டும் சிவமாவதற்கும் வாய்ப்பளிக்கவே அன்னை இவ்வாறு ஐயனிடமிருந்து 'பேதித்து நம்மை வளர்த்தெடுத்து' அருளியிருக்கிறாள். சிவராத்திரி போன்ற புண்ணிய காலங்களிலாவது நாம் சிவத்தியானமிருந்து பராசக்தியின் நம்பிக்கையை ஒருசிறிது மெய்ப்பிக்கமுயலுவோமாக.

சிவராத்திரி என்றவுடன், சிவமாகி நம்மை ஆளும் காமகோடி பெரியவர்களின் நினைவும் தன்னால் ஏற்படுகிறது. இந்த ஆண்டு அவர்கள் செட்டி நாட்டுப் பகுதியில் சிவராத்திரி ஆராதனையை நிகழ்த்துகிறார்கள். பாக்கியசாலிகளெல்லாம் பூஜையைக் கண்ணுற்று அன்னை திரிபுரசுந்தரி, ஐயன் சந்திரமௌளீசன், ஆசாரிய சங்கரர் மூவர் அநுக்கிரகத்தையும் பெறலாம்.

---

கொள்கைகளை அமுலாக்கிய மந்திரியாக இருந்தவருமே இவ்வாறு கூறியிருப்பதிலிருந்து சுதந்திரக் கட்சியினர் எச்சரிக்கை செய்து சொல்லி வந்ததெல்லாம் எவ்வளவு உண்மை என்பது புரியும்.

அரசாங்கத்தார் மக்களின் நகை நட்டுக்களின் மீதும் கை வைப்பார்கள் என்றும் முன்பே சுதந்திரக் கட்சி எச்சரிக்கை செய்தது. அதுவும் கண்ணுக்கு மெய்யாக நடந்து வருகிறது.

### புதிய சாதி வேறுபாடு

இந்தியாவில் தொழில் துறையில் இன்று நிலவும் புது சாதி வேறுபாட்டை பிரிட்டிஷ் இரும்பு எஃகு தொழிற் கழகத் தலைவர் எம். ஏ. பியன்னிஸ் வன்மையாகக் கண்டித்திருக்கிறார். நம் நாட்டில் சர்க்கார் தொழில்கள் என்றும் தனியார் தொழில்கள் என்றும் பிரிந்து நிற்பதையே சாதி வேறுபாடு என்று அவர் குறிப்பிட்டார். சர்க்கார் தொழில்களைச் சொந்தக் குழந்தைகள் போலவும் தனியார் துறைத் தொழில்களை மாற்றாந் தாய்க் குழந்தைகளைப் போலவும் நடத்துவது தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் தீங்கு விளைவிக்கும் என்று அவர் கூறினார்.

பிரிட்டனில் எது சர்க்கார் துறைத் தொழில், எது தனியார் துறைத் தொழில் என்று யாரும் கண்டுகொள்ள முடியாது. ஏனெனில் இரண்டுமே சர்க்காரினால் சமமாக நடத்தப்பட்டு வருகிறது என்று அக் கழகத்தைச் சேர்ந்த ஸர் சார்லஸ் கூட்வே கூறினார்.

வெளி நாடுகளில் கடன் வாங்கிப் பெரிய தொழிற் கூடங்களைச் சர்க்கார் எழுப்புவது போன்ற தவறு வேறு இடையாது என்று அவர்கள் கூறினார்கள். நூற்றுக்கு நூறு பங்கு வெளிநாட்டுக் கடன் பலத்தில் தொழிற்கூடங்களை ஆரம்பித்த நாட்டை உலகில் வேறு எங்கிலும் கண்டதில்லை என்றார்கள்.

## இசை விழா



வாழையடி வாழை யெனக் குரு சிஷ்ய பரம்பரை வழியே வளர்ந்துள்ளது கர்நாடக சங்கீத மரபு. இன்று அடி வாழைகளாக இருக்கும் சில சிஷ்யர்கள் போதிய ஆதரவிருந்தால் முற்றிய வாழைகளாக வளர்ந்து, புதுக் கன்றுகளைத் தோன்றச் செய்து நம் இசை மரபு வாழ உதவுவார்கள். இந்த ஆதரவை அளிக்கும் உயரிய நோக்குடன், ஜனவரி 19ந் தேதியிலிருந்து பிப்ரவரி 10ந் தேதி வரை சமீப காலப் பிரபல வித்வான்களின் பிரதம சிஷ்யர்களைக் கொண்டே பெரம்பூர் சங்கீத சபையினர் ஓர் இசை விழா நடத்தினர். அதன் மூலம் ரசிகர்களின் போற்றுதலுக்கு உரியவராகியுள்ளனர். அரியக்குடி அவர்களின் சிஷ்யரான பி. ராஜம் அய்யர் அவர்களின் கச்சேரியில் தொடங்கி முறையே முடிகொண்டான், காரைக்குடி சாம்பசிவய்யர், மூசிரி, ஜி. என். பி., ஆலத்தூர், எம். எல். வஸந்தகுமாரி, செம்மங்குடி, டைகர் இவர்களின் சிஷ்ய – சிஷ்யைகளான பழனி விஜயலக்ஷ்மி, திருகோகர்ணம் ராமச்சந்திரய்யர் – கிருஷ்ணமூர்த்தி, டி. கே. கோவிந்தராவ், எஸ். கலியாண ராமன், செங்கல்பட்டு ரங்கநாதன், கலோசனு பட்டாபிராமன், பி. எஸ். நாராயணசுவாமி, பி. வி. ராமன் - பி. வி. லக்ஷ்மணன் இவர்களின் கச்சேரியில் வளர்ந்து அரியக்குடியின் மற்றொரு சிஷ்யரான மதுரை என். கிருஷ்ணன் இசையுடன் விழா முடிவுற்றது. பிரம்மோற்சவத்துக்கு ஒரு சிறப்புண்டென்றால் அறுபத்துமூவருக்கும் தனி விசேஷமுண்டு. பிரபல வித்வான்களின் 'ஸீரிஸ்' பெரிய சங்கீத உற்சவமென்றால் இந்தத் தொடரைக் கர்நாடக சங்கீத அறுபத்து மூவர் விழா வெனக் கூறலாம்.

விழாவின் முதல் நாளன்று நம் இசைக்கும், இசைக் கலைஞர்களுக்கும் பேராதரவளித்த காலஞ்சென்ற ஸ்ரீகஸ்தூரி ஸ்ரீநிவாசன் அவர்களின் உருவப் படத்தை ஸ்ரீ வி. டி. கிருஷ்ணமாச்சாரியார் திறந்து வைத்தார்கள்.

---

பம்பாய், பாரதி கலா மன்றக் கட்டட, நூல் நிலையத்துக்காக நிதி திரட்டும் பணியில் நடிகர் திலகம் சிவாஜி கணேசனும் அவரது குழுவினரும் சமீபத்தில் மூன்று நாடகங்களை பம்பாயில் நடித்தனர். இந்த நாடக விழாவை பம்பாய் கவர்னர் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் ஆரம்பித்து வைத்தார்.







# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

நரேந்திர நாதன் நரேன் என்ற செல்லப் பெயரில் மிக மிகச் செல்லமாக வளர்ந்து வந்தான். விஷமமும், துடுக்குத்தனமும், பிடிவாதமும் கொண்ட விளையாட்டுப் பிள்ளையாக வளர்ந்தான். அவனுக்கு விளையாட்டாக இருந்தது வீட்டினருக்கு ஓயாத தொல்லையாகத்தான் இருந்தது.

அடம் பிடிப்பதென்றால் அதற்கும்தான் ஓர் எல்லை கிடையாதோ? நரேனுடைய பிடிவாதத்துக்கு எல்லையே தான் இல்லை. கெஞ்சினாலும், கொஞ்சினாலும், மிஞ்சினாலும், சாம தான பேத தண்ட உபாயங்களில் எதனைப் பின்பற்றினாலும் அவனை யாராலும் அடக்க முடியாமல் இருந்தது.

ஒரு நாள் இப்படித்தான் புவனேசுவரியின் பொறுமையைச் சோதிக்கும் அளவுக்கு நரேன் சண்டித்தனம் செய்தான். அவளுக்கு வந்த ஆத்திரத்தில் குழந்தையின் தலையில் தண்ணீரை மடமட வெனக் கொட்டினாள். "பரமேசுவரா, பிள்ளைவரம் வேண்டி உனக்கு நோன்பிருந்தேன். நீ உன் பூதகணங்களில் ஒன்றை இங்கு அனுப்பி விட்டாயா? மகாதேவா, மகாதேவா!" என்று அலுப்புடன் அரற்றினாள். என்ன ஆச்சரியம்! நரேன் பெட்டிப் பாம்பாக அடங்கி விட்டான்!

நரேனைச் சரிக்கட்டுவதற்கு வழி அகப்பட்டு விட்டது! அவன் தலையில் தண்ணீரைக் கொட்டுவது, காதில் சிவ நாமத்தை உச்சரிப்பது — இதுவே அந்த வழியாகும்.

வீட்டில் உள்ளவர்களைப் படாத பாடு படுத்தி வைத்த நரேனிடம் குழந்தைப் பிராயத்திலிருந்தே மிருதுவான இயல்புகளும் பொருந்தியிருந்தன. பறவைகளிடத்திலும், விலங்கினங்களிடமும் அவனுக்குத் தனிப்பட்டதொரு பிரேமை இருந்தது. நரேனின் விளையாட்டுத் தோழர்களில் வீட்டுப் பசு, ஒரு குரங்கு, ஆடு, மயில், புறாக்கள், சீமைப் பெருச்சாளி ஒன்று இவ்வளவும் இடம் பெற்றிருந்தன.

வீட்டுப் பசு அசை போடுவதைக் கண்டு குழந்தையும் இன்பத்தை அசை போடுவான். குரங்கு அவனுக்கு 'முகம்' காட்ட, அவன் குரங்குக்கு 'முகம்' காட்டி மகிழ்வான். பயந்து பயந்து விலகி ஓடும் ஆட்டைப் பரிந்து பரிந்து துரத்திச் சென்று அதற்கு உணவூட்டுவான். தோகை தரையில் புரள, அதன் பளுவைச் சுமக்க முடியாமல், அசைந்து அசைந்து வரும் வன்கண் மயிலைத் தன் இன்கண்ணால் இனிக்க நோக்கித் தன் இதயத்தைத் தோகை விரித்தாடுவான். 'கும் கும்' என்று குமுறிக் கொண்டிருக்கும் மாடப் புறாக்களைப் பறக்க விட்டு, அவை சடசட வென்று இறகுகளை அடிக்கும்போது தன் உள்ளத்தையும் அவற்றுடன் பறக்கவிட்டு ஆர்ப்பரிப்பான். சீமைப் பெருச்சாளியின் முதுகை வாலிலிருந்து தலைப்புறமாக நீவிவிட்டு, அதன் ரோமம் சிலிர்க்கும் போது தன் பட்டு விரலும் கூச, தன்னுடைய உடலிலுள்ள பொடிப் பொடியான தங்க மயிர்களெல்லாம் சிலிர்க்க உடலை நெளித்துக் கோணிக் கொள்வான்.

'காக்கைக் குருவி எங்கள் ஜாதி... நோக்கும் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை' என்ற அத்வைதமாகிய அன்பு மதத்தைப் பரப்பப் பிறந்தவனல்லவா நரேன்? 'வானில் பறக்கின்ற புள்ளெலாம் நான்; மண்ணில் திரியும் விலங்கெலாம் நான்' என்ற உணர்வைப் பெறப் போகிறவன் அல்லவா அவன்? 'எவ்வுயிர்த் திரளும் உலகில் என்னுயிர்' என்ற பாவனைக்கு முதல்



படிதான் நரேன் குழந்தைப் பருவத்தில் கொண்டிருந்த அன்புகளோ?

முரட்டு நரேனின் இன்னொரு மென்மையான குணம் அவனது ஈகை. நரேனின் தந்தையான விசுவநாத தத்தரும் மிக உதாரமான உள்ளம் படைத்தவர். உற்றோரும், சுற்றத்தினருமாக அவரது பெரு மாளிகையில் எப்போது பார்த்தாலும் 'ஜே, ஜே' என்றுதான் இருக்கும். குடித்து விட்டுச் சோம்பித் திரிகிறவர்களும் கூட அந்த இல்லத்தில் நன்றாக உண்டு உடுத்திச் சுக புருஷர்களாக இருப்பார்கள். இதனால் முறைகெட்டவர்கள் மேலும் முறைகேடுற தத்தர் இடம் அளிப்பதாகக் குறை கூறவும் இடம் ஏற்பட்டது. என்றாலும், அவர் என்னவோ, 'தாங்கள் படும் துயரத்தை மறக்கத்தானே அவர்கள் கெட்ட வழிகளில் செல்கின்றனர்? அவர்களுக்கு இரக்கம்தான் காட்ட வேண்டுமே யல்லாது நீதி நியாயப்படி தண்டிக்கலாகாது' என்றே கருதி வந்தார். வழக்காடும் தொழிலில் நீதியை முன் வைத்துப் பேசினாலும் வாழ்க்கையில் கருணையையே முன்னால் வைத்து ஒழுகியவர் விசுவநாதர்.



தந்தையின் தர்ம சிந்தனை தனயனிடம் பெருகி வளர்ந்தது.

அதுவும் ஆண்டிப் பண்டாரங்களைக் கண்டு விட்டால் நரேனின் ஆனந்தம் கட்டுக்கடங்காமல் போகும். தன் கையில் எது கிடைத்தாலும் அதை அவர்களுக்குப் பிச்சை போட்டு விடுவான்.

ஒரு நாள் அவனது இடையில் ஒரே ஒரு வஸ்திரத்தை அள்ளிச் சொருகி விளையாட விட்டிருந்தார்கள். தேசாந்திரி யாரோ யாசகத்துக்கு வந்திருக்கிறார்! குழந்தை தான் உடுத்தியிருந்த ஒரே ஆடையை அவருக்கு அளித்து விட்டுச் சந்தோஷமாக வீட்டுக்குள் வந்தது!

இப்பேர்ப்பட்ட தயாள குணம் எந்தவீட்டுக்குத்தான் கட்டுப்படியாகும்? எனவே சாதுக்கள் யாரேனும் கண்ணில் பட்டாலே நரேந்திரனை ஓர் அறையில் விட்டுக் கதவை மூடும் வழக்கம் ஏற்பட்டது. அப்படியும் அவர்களுடைய குரல் கேட்டால் நரேன் சும்மா இருக்க மாட்டான். அந்த அறையில் உள்ள பொருட்களை யெல்லாம் ஜன்னல் வழியாக அவர்களிடம் வீசி எறிவான்.

எதிர் காலத்தில், பரிவ்ராஜக சந்நியாசியாக, வீடு வாசலின்றிச் சஞ்சாரம் செய்யப் போகும் நரேனுக்கு, விளையும் பயிர் முளையிலே என்பது போல, அடி நாளிலிருந்தே ஆண்டிப் பரதேசிகளிடம் ஈர்ப்பு இருந்தது போலும்!

ஆண்டியாகப் போக வேண்டும் என்று உள்ளூற ஆசைப்பட்ட நரேனுக்கு இன்னொரு விசித்திரமான அபிலாஷையும் உண்டு. தான் எதிர்காலத்தில் 'கோச்கமேன்' ஆகவேண்டும் என்பதே அது. விசுவநாத தத்தரின் வண்டியோட்டிக்கு 'ஜம்'மென்று படாடோபமான ஆடை அலங்காரங்கள் உண்டு. 'ஆஹா, அவனுடைய அங்கியைச் சொல்லவா? தகதகக்கும் டவாலியைச் சொல்லவா? அல்லது, தலையில் அணியும் பாகையைச் சொல்லவா? கையில் உள்ள சவுக்கைச் சொடுக்கிக் கொண்டு, தெருவில் செல்பவர்களை யெல்லாம் 'ஒரம் ஒரம்' என்று விரட்டும் அவனுக்கல்லவா நடப்பவர்களெல்லாம் அடங்கி நடக்கிறார்கள்?' இதைப் பார்த்துப் பார்த்துப் பூரிக்கும் குழந்தை நரேனுக்குத் தானும் வண்டியோட்டியாக வேண்டும் என்று கொள்ளை ஆசை ஏற்பட்டது.

சாரதியாக வந்த போதுதானே கண்ண பிரானும் தனது மகத்தான உபதேசத்தை வழங்கினான்? சரீரத்தைத் தேராகவும், மனசைக் கடிவாளமாகவும், புத்தியைச்



சாரதியாகவும் கொண்டு சத்திய மார்க்கத்தில் செல்வது பற்றி உபநிஷதமும் கூறுகிறதல்லவா?

அன்னையின் மடியில் நரேந்திரனின் ஆரம்பக் கல்வி நடைபெற்றது. ராமாயண, மகாபாரதப் பாடல்களை உள்ளம் உருகிப் பாடும் புவனேசுவரி அந்தப் பாடல்களையே குழந்தைக்கு ஆரம்பப் பாடங்களாகப் பயிலுவித்தாள். இந்தக் கல்வி நரேனின் இதயத்திலேயே ஊறிக் கரையலாயிற்று. ராமபிரானிடமும், சீதாபிராட்டியிடமும் அவனுக்கு எல்லையற்ற பக்தி உண்டாயிற்று.

சீதா சமேதனான ஸ்ரீ ராமசந்திரப் பிரபுவின் பொம்மையை வாங்கி வைத்துக் கொண்டு தன் இளம் உள்ளம் எண்ணிய முறையில் அதற்குப் புஷ்பமிட்டு, பணியாரங்கள் நிவேதித்துப் பூஜை செய்வான் நரேன். இதில் அவனுக்குச் சகாவாக அந்தணச் சிறுவன் ஒருவன் கிடைத்தான். ஒரு நாள் தன் மாளிகையில் ஸ்திரீகளின் கட்டுக்கு மீதாக அமைந்த ஒதுக்குப்புறமான மாடியறையொன்றுக்குப் பொம்மையுடன் சென்றான் நரேன். அந்தணச் சிறுவனும் உடன் சென்றான். அந்தஅறையில் சீதாராமர் 'பிரதிஷ்டை' செய்யப்பட்டார். பிறகு, அறையைத் தாழிட்டுக் கொண்டு இரண்டு பாலர்களுமாக 'நிஷ்டை' செய்யத் தொடங்கினர். 'நிஷ்டை' என்று அதனைக் கேலியாகச் சொல்வதற்கில்லை. ஏனெனில், தான் நினைக்கும் பொருளிலேயே அமிழ்ந்து, பிறகு நினைப்பும் அழிந்து போகும் பரம நிலை உண்மையிலேயே குழந்தை நரேனுக்குச் சித்தித்துவிட்டது.

நரேனைக் காண வில்லையே என்று வீட்டில் உள்ளவர்களெல்லாம் திகில்



அடைந்தனர். எல்லா இடத்திலும் தேடிப் பார்த்தனர். ஒருவரும் நாடாத அந்த மாடி அறையை அடைந்தனர். அங்கே உட்புறமாகக் கதவு தாழிட்டிருப்பதைக் கண்டு தட்டினர். ஏதும் பயனில்லை. கதவை உலுக்கினர். அதற்கும் உத்தரம் இல்லை. அச்சம் கொண்டவர்களாக அவர்கள் கதவை உடைத்து உள்ளே பிரவேசித்தனர். என்ன ஆச்சரியம்! அங்கே புஷ்பாலங்காரனை ஸ்ரீ ராமபிரானின் முன்பு நரேன் நிச்சலனமாக நிஷ்டையில் இருந்தான். (நண்பனுக்கும் நிஷ்டை கூடிற்றோ? அல்லது அவன் கதவைத் திறக்க அஞ்சிச் சும்மா விருந்தானோ?)

'தவம் புரியும் சித்தர்கள் பலருண்டு. தம்மை மறந்து அவர்கள் பலப் பல ஆண்டுகளுக்குத் தவம் புரியும் போது அவர்களுடைய தாழ் சடை நீண்டு நீண்டு சென்று ஆல விழுதுபோல் பூமியைப்பிளந்து கொண்டு செல்லும்' என்றெல்லாம் நரேந்திரன் கேள்வியுற்றதுண்டு. தானும் அதே போலக் கண்களை மூடிக் கொண்டு அமர்ந்து, அவ்வப்போது கேசம் வளர்ந்து பூமியை நோக்கிச் செல்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொள்வான். இவ்வாறு குழந்தைத்தனமாக எண்ணினாலும், அப்படிக் கண்களை மூடும்போது வாஸ்தவமாகவே அவனுக்குத் தியான யோகம் சித்தித்த சமயங்கள் பல உண்டு. ஒரு முறை தியானத்தின் போது குழந்தை நரேந்திரன் புத்தரைக் கண்டான்.

முரட்டுத்தனம், துடுக்குத்தனம், சண்டை எல்லாவற்றையும் நாம் நரேனின் குழந்தைப் பருவத்தில் காண்கிறோம். ஆனால் இவற்றுக்கிடையே மற்றப் பாலர்களிடம் காண முடியாத இந்த அந்தரங்கமான வாழ்க்கையையும் அந்தப் பால்மணம் மாறாப் பாலன் வாழ்ந்து வந்தான்.

வயசு வந்தபின் தியான யோகத்திலே கரைந்து போய், கைவல்ய நிலையிலேயே இருக்க வேண்டும் என நரேந்திரர் தம் ஆசானைக் கேட்டுக் கொண்டார். அந்த ஆசானோ தியான யோகத்துக்கும் மேலாகத் தியாகயோகத்தைக் கூறினார். மோக்ஷமடைய வேண்டுமென்ற ஆசையையும் தியாகம் செய்து மனித குலத்துக்காகத் தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளும்படி சிடனைப் பணித்துவிட்டார்.

நரேன் பேரன்புடன் நடத்தி வந்த ராம உபாசனைக்கு ஆபத்து வந்தது ஒரு நாள். இல்லற வாழ்க்கையால் ஏற்படும் இன்னல்களைக் குறித்து யாரோ பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு விட்டான் நரேன். 'கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் செய்வது இவ்வளவு தப்பா? அப்படியானால் ராமரே தப்பல்லவா செய்திருக்கிறார்?' என்று சிறுவனின் சிந்தனை படர்ந்தது. 'தப்பு செய்த ராமர் கடவுளாக எப்படி இருப்பார்?' என்னும் எண்ணம் கவடு விட்டது. அவ்வளவுதான்! தான் அவ்வளவு காலம் செலுத்திய பக்திநெஞ்சை அழுத்தி நோகச் செய்ய, சீதாராமர் பொம்மையைத் தூக்கி எறிந்தே விட்டான் நரேன். பொம்மை சுக்கலாயிற்று.

பொம்மை மட்டும் சுக்கலாக வில்லை. நரேனின் சின்னஞ்சிறு நெஞ்சமுமே சுக்கலாயிற்று. அம்மாவிடம் ஓடினான். 'ஓ' வென்று கதறி அழுதான். ராமனை வைத்துக் கொள்ளவோ அவனுக்குப் பிடிக்கவில்லை; வைத்துக் கொள்ளாமல் உதறித் தள்ளியதையும் தாள முடியவில்லை. 'உன்னைக் கொள்ளவும் முடியாது: தள்ளவும் முடியாது' என்று தேவியைப் பற்றி ஸஹஸ்ரநாமம் கூறுவது வேறு ஒரு விதத்தில் பாலன் நரேனின் அநுபவமாயிற்று.

''அசட்டுக் கண்ணே, இதற்கோ அழுவாய்?'' என்று செல்லச் சேயை ஆற்றினாள் அன்னை. ''ராமன் கலியாணம் பண்ணிக் கொண்டதில்தானே உனக்கு வருத்தம்? தப்பு செய்த அவர் ஸ்வாமியாக இருக்க முடியாது என்றுதானே நரேன், நீ நினைக்கிறாய்? ராமன் ஸ்வாமியாக இல்லா விட்டால் போகட்டுமே! உனக்குக் கலியாணம் செய்து கொள்ளாத ஸ்வாமியை நான் தருகிறேன். உனக்குத்தான் சாமியார் என்றால் ரொம்பப் பிடிக்குமே! சாமியாராக இருக்கும் ஒரு ஸ்வாமியை உனக்குத் தருகிறேன்'' என்று மைந்தனை ஆசுவாஸப்படுத்தினாள்.

தவயோகிக் கோலத்தில் இருக்கும் கைலாஸ நாதனின் பதுமை ஒன்றை நரேனுக்குத் தந்தாள் புவனேசுவரி.

பரமேசுவரனை விடப் பெரிய தியாகி உலகில் யார் உண்டு? தியாக ராஜன் அல்லவா அவன்? அன்புருவான அம்பிகையையும், அழகே உருவான ஆறுமுகனையும், அறிவு உருவான ஆனைமுகனையும் துறந்து தவம் இருக்கும் அவனுடைய தியாகத்துக்கு இணையாக எதைச் சொல்ல முடியும்? விட்டுப் பிரியக் கூடியவர்களா அவர்கள்?

துறவித் தெய்வத்தின் அருளால் பெற்ற பிள்ளைக்கு அந்தத் துறவித்தெய்வத்தையே அளித்து விட்டாள் புவனேசுவரி. அல்லது பிள்ளையைத்தான் அந்தத்

துறவித் தெய்வத்துக்கு அளித்து விட்டானோ? எப்படியானாலும், சிறுவனாகச் சிவபிரானை வழிபடத் தொடங்கிய நரேனின் உள்ளத்தில் தியாக வித்தினை ஊன்றியாகி விட்டது. அது முளையாகி, செடியாகி, மரமாகி, விழுது விட்டுக் கொண்டு விரிந்து வளர்ந்ததுதான் ஸ்வாமி விவேகாநந்தரின் வரலாறு. அந்த மரத்தில் பழுத்த பல்லாயிரக் கணக்கான கனிகளில், எதிர்காலத்தில் தியாகத் தோப்பு வளர்வதற்கான பல வித்துக்கள் ஊறிக் கிடந்தன. 'பிறரைக் கடைத் தேற்றுவதற்காக நீ உனது மோக்ஷத்தையும் தியாகம் செய்வாயாக; பிறரைக் கரையேற்றுவதற்காக நீ நரகத்துக்குச் செல்லவும் தயங்காதே' என்ற மகாமந்திரத்தை மனித குலத்துக்குத் தந்த மகாத்மா அல்லவா ஸ்வாமிஜி?

ராமனிடம் அத்தியந்தப் பிரேமை பூண்ட நரேந்திரன் தன் விருப்பத்துக்கு மாறாகவே அந்த மூர்த்தியை நீத்தது அரிய விஷயமாகும். நரேனின் உணர்ச்சிகள் ராமன்பால் படர்ந்திருந்தன. ஆனால் அந்தக்குழந்தை அறிவில்உண்மை என்றால் என்ன என்று பகுத்துப் பார்க்கும் போது, விவாகம் செய்து கொண்ட ராமன் மெய்யான தெய்வமில்லைஎன்றே தோன்றியது. மானுடனாகவே வாழ்ந்து மானுடர்களை உய்விக்க வந்த தெய்வம் ராமன் என்று குழந்தையால் புரிந்து கொள்ள முடிய வில்லை. தாம்பத்தியம் என்றால் இன்னதென்றே அறியாத பாலனால் தேவ தேவியரின் சேர்க்கை பௌதிகமானதல்ல என்று எப்படி அறிய முடியும்? எனினும், புத்திக்குத் தன் இச்சையை அடங்கச் செய்து, எல்லையற்ற கிலேசத்தையும் பொருட்படுத்தாது ராமன் பொம்மையை விலக்கி விட்டான் நரேன். பொதுவாக, பாலப் பருவத்தில் இவ்வாறு ஆசைகளைப் புத்திக்குக் கட்டுப் படுத்தும் பாவனையைக் காண முடியுமா? அரும்பிட்டபோதே நரேனிடம் எத்தகைய அந்தரங்க சுத்தம்? தான் கண்ட சத்திய தரிசனத்தில் எத்தகைய நம்பிக்கை? 'எவ்வளவு இனிய தளையாயினும் அதனை நீக்கிச் சுதந்திரமாக வாழுங்கள்' என்று பிற்காலத்தில் போதித்ததற்கு எத்தகைய முன்னோடி?

மூர்த்தத்தை எறிந்த பின்னும் ராம மூர்த்தியை என்னவோ நரேந்திரனால் மறக்கத்தான் முடிய வில்லை. சுற்றுப் புறத்தில் ராமாயண படனம் எங்கு நடைபெற்றாலும் அங்கெல்லாம் தவறாது சென்று விடுவான் சிறுவன். இரவு வேளை ஏறிக் கொண்டே போனாலும் வீட்டு நினைப்பின்றி அதில் மூழ்கி விடுவான். வங்காளி ராமாயணத்தில்ஆஞ்சநேய ஸ்வாமி வாழைத் தோட்டங்களில் வசித்ததாக வரும். அநுமத் பிரபாவத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த நரேந்திரன் இதைக் கேட்டறிந்ததிலிருந்து, ராமாயணம் முடிந்தபின் நேராக வீட்டுக்கு வருவதில்லை; அருகில் உள்ள ஒரு வாழைக் கொல்லைக்குச் சென்று அநுமந்தன் வருவானோ என்று பல யாமங்கள் காத்துப் பார்ப்பான்.

அடக்கம், பிரம்மச்சரியம், வீரம் மூன்றுக்கும் உறைவிடமான ஆஞ்சநேய ஸ்வாமிதான் இந்திய இளைஞர்களின் இலட்சிய புருஷர் என்று ஸ்வாமி விவேகாநந்தர் கூறியிருக்கிறார்.

நள்ளிரவில் நரேன் கதை கேட்டுத் திரும்பும் வரை அவனைப் பின் தொடர்ந்து விட்டோம். அதன்பின் அவன் எப்படி நித்திரை கொள்வான் என்பதையும் பார்ப்போம். இரவில் அவன் உறங்குவது வேறெந்தக் குழந்தையிடமும் காணமுடியாத விசித்திரமான முறையிலாகும். துயில்வதற்காக அவன் இமைகளை மூடியவுடன் அவனுடைய புருவங்களின் மத்தியில் ஓர் ஒளிப் பந்து தோன்றும். அந்த ஒளியின் வண்ணம் விதம் விதமாக மாறும். பிறகு அந்த ஒளிப் பந்து விரிந்து கொண்டே போகும். விரிந்து விரிந்து சென்று அந்த வட்டம் வெடிக்கும். நரேன், தன் சரீரம் முழுவதையும் வெண்மையானதொரு தூய ஒளி மூழ்க்காட்டுவதாக உணர்வான். இந்த உணர்விலேயே உறக்கம் கொள்வான். நாள் தோறும் இப்படியேதான் நடைபெற்று வந்தது. காயத்தையே கோயிலாக்கி மூலாதாரத்திலுள்ள ஜீவசக்தியை சிரஸிலுள்ள சிவத்திடம் ஒன்று படுத்தும் தந்திர சாதனையில், புருவ மத்தியில் தேவி வானவில்லின் வண்ணங்களுடன் ஒளிர்வதாக மகான்கள் கண்டிருக்கிறார்கள். இதே ஸ்தானத்தில் நரேன் கண்ட வண்ண விசித்திரங்கள் வெண்மையில் கரைந்தது சிவசக்தி ஐக்கியத்துக்கு ஓர் அடையாளமோ?

நித்திரையின் இயற்கையே இதுதான் போலும் என்று நரேன் எண்ணி வந்தான். எல்லோரும் தன்னைப் போல ஜோதிப் பிரவாகத்தில் அமிழ்ந்தித்தான் தூங்குகிறார்கள் என்று நினைத்து வந்தான். தன் தோழன் ஒருவனிடம் அகஸ்மாத்தாக இதைப் பற்றிப் பேசி அந்தத் தோழன் வியப்புற்ற போதுதான் இது

---

ஸ்வாமி விவேகாநந்தர் பிறப்பெடுத்தது 1863-ம் ஆண்டில்; சென்ற இதழில் கண்டிருப்பது போல 1862-ம் ஆண்டில் அல்ல.

தன்னுடைய பிரத்தியேக அநுபவம் என்பதே நரேனுக்குப் புரிந்தது.

இந்தப் பிரத்தியேக அநுபவத்தையும் நரேன் சொல்லாமலே அறிந்த ஒருவர் இருந்தார். பல ஆண்டுகளுக்குப் பின் நரேந்திரன் அவரை அடைந்தபோது அவர், ''என் குழந்தாய், நரேன்! நீ உறக்கம் கொள்ளும்போது ஓர் ஒளியினைக் காண்கிறாயா?'' என்று கேட்டதுண்டு. நரேந்திரனின் நனவுலகு மட்டுமின்றிக் கனவுலகையும் அறிந்திருந்த அவர்தான் நரேந்திரனை விவேகாநந்தராக்கியவர். அதெல்லாம் பின்னால் வரப்போகும் கதை.

கதைகளின் மூலம் மட்டுமின்றி எழுத்தாலும், எண்ணாலும் மகனுக்குப் பாடம் புகட்டவும் தொடங்கினாள் புவனேசுவரி. தாய்மொழியாகிய வங்காளி எழுத்துக்களையும், ஆங்கில 'அரிச்சுவடி'யையும் (ஆங்கிலத்தில் அரி ஏது?) அவனுக்குக் கற்பித்தாள்.

நரேந்திரன் ஆறாவது வயதில் பாடசாலைக்குச் செல்லத் தொடங்கினான். எழுதவும், படிக்கவும் கற்றுக் கொண்டான். எண்களை மனனம் செய்தான். பாடம் வந்தது; அதோடு பள்ளிக்கூடத்தில் படித்த சில பிள்ளைகளிடமிருந்து அசங்கியமான சில சொற்களும் வந்தன.

அந்த வார்த்தைகளை நரேன் வீட்டில் சொல்லியவுடன் அவனது ஆரம்பப் பள்ளிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி விழுந்தது. ஓர் உபாத்தியாயரை நியமித்து நரேனுக்கு வீட்டிலேயே கற்பிக்க ஏற்பாடாயிற்று. அண்டையிலுள்ள சில சிறுவர்களுக்குமாகச் சேர்த்து வீட்டின் பூஜை மன்றத்தில் பாடம் நடைபெற்று வந்தது. நரேனின் அற்புதமான அறிவுசுடர் வீசத் தொடங்கியது. மற்ற மாணவர்கள் 'ஆனா ஆவன்னா'வுடன் மல்லுக்கொடுத்துக் கொண்டிருக்கையிலேயே நரேன் விரைவாகப் படிக்கவும் எழுதவும் பயிற்சி பெற்று விட்டான். 'ஏக ஸந்தக்ராஹி' என்பது போல் ஒரு முறை கேட்டாலே விஷயத்தைப் பிடித்துக் கொண்டான் நரேன். 'முக்தபோதம்' என்ற நெருடலான சம்ஸ்கிருத இலக்கணத்தை ஏழாம் வயசிலேயே நரேன் நெட்டுருவாக்கிக் கொண்டு விட்டான் என்றால் பாருங்களேன்!

ராமாயணம், மகாபாரதம் முதலியவற்றிலிருந்து நீண்ட பல பகுதிகளைப் பாடமாக ஒப்பிப்பான் சிறுவன் நரேந்திரன். ஒரு சமயம் சில பரதேசிப் பாடகர்கள் நரேனுடைய இல்லத்துக்கு வந்தனர். ராமாயணத்தை அவர்கள் கானம் செய்யும்போது அவர்களை நிறுத்தி, அவர்கள் செய்த பிழைகளைத் திருத்தினான் குழந்தை. அவர்கள் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தனர்.

நரேனுக்கு மிகவும் பிடித்தமான விளையாட்டு ராஜா விளையாட்டு. நரேந்திரநாதன் தன் பெயருக்கேற்ப, ராஜாவாக இருந்து தடபுடலாகத் தர்பார் நடத்துவான். முற்றத்திலிருந்து பூஜையறைக்குச் செல்லும் படிக்கட்டுக்களில் உச்சிப்படிதான் அவனது சிம்மாசனம். ராஜா ரொம்பக் கறார் பேர்வழி. அந்த மட்டத்தில் உட்கார வேறு யாரையும் அநுமதிக்க மாட்டார் அவர். தமது பிரதம மந்திரியையும், சேநாதிபதியையும், தமக்குக் கப்பம் செலுத்தும் இதர மன்னர்களையும் 'நியமனம்' செய்து, அவரவருக்குரிய அந்தஸ்தை அநுசரித்துப் படிகளில் மேல், கீழாக ஸ்தானமும் ஒதுக்குவார் மாமன்னர் நரேந்திரர்.

நரேனின் ராஜ கம்பீரம் சொல்லி முடியாது. நெருப்புத்தான். அவன் வார்த்தைக்குக் கட்டுப்படாதவர்களைத் தன் பார்வையாலேயே கதி கலங்கச் செய்து விடுவான். புவனேசுவரியிடமிருந்து மைந்தன் பெற்ற தேஜஸே அது. நெருப்பிலும் கசிவுடன் கூடிய விசித்திர நெருப்பாக ஒளிர்ந்தவள் அவள்; இந்தக் கசிவையும் அவளது மைந்தன் பூரணமாகப் பெறப்போகும் காலம் வரத்தான் போகிறது!

அஞ்சாமை என்ற தத்துவமே உருப் பூண்டு வந்தாற் போல ஜ்வலித்தவர் ஸ்வாமி விவேகாநந்தர். ராஜ குலத்தில் பிறந்து, ராஜ யோகத்தைப் பயின்ற அந்த யோகி ராஜரிடம் என்றுமே இந்தக் கம்பீரம் விளக்கமுறப் பொலிந்தது என்பது அவரது சித்திரங்களைக் கண்டாலே தெரியும்.

சில மகான்கள் தோற்றத்தில் கருணையின் நளினம் அதிகமாக வெளிப்படத் துலங்குவார்கள். சில மகான்களோ ஞானத்தின் அழுத்தம் புலப்பட இலங்குவார்கள். ஸ்வாமிஜியின் உருவத் தோற்றத்தில் பொதுவாக ஞானத்தின் ராஜ கம்பீரமே ததும்புவதைக் காண்கிறோம். எனினும், தன் தாய்த் திருநாட்டின் ஏழை எளியோரை எண்ணிக் கருணைமயமாக அவர் வாய்விட்டுப் புலம்பிக் கதறியது போலக் கதறியவர் வேறு யார் உண்டு?

(தொடரும்)



உங்கள் இரவை பிரகாசமாகச் செய்யுங்கள்...



உங்கள் பகல் வேளையையும் பிரகாசமாக்குங்கள்...



Osram உபயோகித்து இருளை அகற்றுங்கள்...



Osram அதிசய விளக்கை பொருத்துங்கள்

அது பிரகாசமான ஒளியை தருகிறது.

இப்பொழுது 80, 125 வாட்டுகளில் நிறம் சரிப்படுத்தின மெர்குரி வேப்பர் விளக்குகளும், அவசியமான, ஆனால் இப்பொழுது ஏராளமாக கொடுக்க முடியாத OSRAM ப்ளோரஸென்ட் டியூப்புகளும், இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது.

ஒரு G.E.C. தயாரிப்பு

தி ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பனி ஆப் இந்தியா பிரைவேட் லிட்.,

TRADE MARK G.E.C. OWNED BY THE GENERAL ELECTRIC COMPANY LIMITED OF ENGLAND.
PERMITTED USER—THE GENERAL ELECTRIC COMPANY OF INDIA PRIVATE LIMITED.



பிப்ரவரி பத்தாம் தேதியன்று பம்பாயில் சுதந்திரக் கட்சியின் தலைமைச் சபை நிறைவேற்றிய இந்தத் தீர்மானத்தைத் தமிழ் நாட்டிலுள்ள ஆண் பெண் அடங்கலும் படித்துப் பார்த்துச் சிந்திக்கவேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன். இது கட்சி மனப்பான்மையோடு செய்த தீர்மானம் அல்ல. தேசத்தின் பாதுகாப்பைக் குறித்து ஆழ்ந்த அக்கறையுடன் நிறைவேற்றிய தீர்மானம் இது.

—ராஜாஜி

# பாதுகாப்புக்கு வழி

பிப்ரவரி பத்தாம் தேதியன்று ஆசாரிய ரங்கா அவர்களின் தலைமையில் சுதந்திரக் கட்சியின் அகில இந்தியத் தலைமைச் சபை பம்பாயில் கூடியது. பதினொரு மாகாணங்களிலிருந்து 69 பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். ராஜாஜியும் மற்றும் பல தலைவர்களும் காலையிலும் பிற்பகலிலும் நடந்த கூட்டங்களில் கலந்து கொண்டு உரையாற்றினார்கள். பிற்பகல் ஏகமனதாக நிறைவேறிய தீர்மானமாவது:

1. சுதந்திரக் கட்சியானது சீனத் தாக்குதலை யொட்டித் தேசத்தில் ஏற்பட்டுள்ள தேசிய எழுச்சியைப் பெருமையுடன் நோக்குவதுடன் பல கஷ்டங்களிடையே எதிரிகளோடு போராடிய நமது ஆயுதப் படையினருக்குத் தனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது. வெளிநாட்டு உறவு முறையிலும், பாதுகாப்புத் துறையிலும் பல்லாண்டுகளாகக் கையாண்டு வந்த தவறான கொள்கைகள்தான் நாம் யுத்த முனையில் தோல்விகளை அடையவும், அவமானகரமான சீனப் போர் நிறுத்தத்துக்கு உடன்படவும் காரணமாகும் எனச் சுதந்திரக் கட்சி கருதுகிறது.

2. இந்தத் தவறான கொள்கைகளின் விளைவாகவே தேசிய நலன்களுக்கு விரோதமாகவும், தேசத்தின் கௌரவத்துக்குப் புறம்பாகவும், 1962, நவம்பர் 14-ம் தேதியன்று ஏகமனதாகப் பார்லிமெண்டில் நிறைவேற்றிய தீர்மானத்துக்கு மாறாகவும் கொழும்புத் திட்டத்தை நாம் ஏற்கும்படி நேரிட்டது என்பதைச் சுதந்திரக் கட்சியின் அகில இந்தியத் தலைமைச் சபை ஆழ்ந்த வருத்தத்தோடு குறிப்பிடுகிறது.

3. கம்யூனிஸ்ட் சீன ஆக்கிரமிப்பு விவகாரத்தில் நாம் உறுதியோடும், எச்சரிக்கையோடும் நடந்துகொள்ள வேண்டுமென 1960, மார்ச் மாதத்திலேயே சுதந்திரக் கட்சி எடுத்துக் கூறிற்று. நமது நாட்டில் துஷ்பிரவேசம் செய்து நமது பூமியைக் கம்யூனிஸ்ட் சீனா ஆக்கிரமித்திருக்கும் வேளையில், தேசத்தின் உள்நாட்டுப் பிரத்தியட்ச நிலைக்கு இசைவாக நமது கொள்கைகளைப் புனராலோசனை செய்ய வேண்டும் எனவும், நம்முடைய காப்புப் பலம் சீன ராணுவ பலத்துக்கு ஏற்ப இருந்தாக வேண்டும் என்றும் சுதந்திரக் கட்சி அப்போதே எடுத்துக் கூறிற்று. தேசத்தின் பாதுகாப்பு நடவடிக்கைகளைக் குறித்து வலியுறுத்திய சுதந்திரக் கட்சி, பாகிஸ்தானோடு உள்ள தகராறுகளைத் தீர்த்து, ஓர் உடன்பாடு காண முயல வேண்டும் என்றும், இந்தியா - பாகிஸ்தான் இரண்டும் அடங்கிய உப - கண்டப் பாதுகாப்புக்குக் கூட்டாக இருந்து பாடுபடலாம் எனப் பாகிஸ்தான் தலைவர் பகிரங்கமாக விடுத்த யோசனையைத் தீவிரமாக ஆலோசனை செய்ய வேண்டும் என்பதாகவும் கூறிற்று. துரதிர்ஷ்டவசமாக, சுதந்திரக் கட்சியின் இந்த யோசனைகளை அரசாங்கம் ஏற்கத் தவறியதால் இன்று தேசத்துக்குப் பெரிய ஆபத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன.

4. எந்த ஒரு காரியத்தையும் சீனர் முந்திக்கொண்டு ஆரம்பித்துச் செய்வதாகவும் நாம் அதற்குப்பின் எதிர் நடவடிக்கை எடுப்பதாகவும் இன்று நிலைமை இருப்பதை மாற்றி நாமே முதல் நடவடிக்கை எடுக்கும்படியான நிலைமையை உண்டு பண்ணக்கூடிய ராணுவத்திட்டம் ஒன்றை வகுத்துச் சீனரின் அக்கிரமங்களையும் பேராசைகளையும் தடுத்துநிறுத்துவது அவசிய

மென்பது சுதந்திரக் கட்சியின் கருத்து. சீனத் தாக்குதலைத் தடுத்து முறியடிக்க வேண்டும் என்கிற இந்தியாவின் கருத்தை ஆதரிக்கும் உலக நாடுகளுடன் நமது அரசாங்கமும் மக்களும் நெருக்கமாகக் கலந்து ஆலோசனை நடத்தி நடவடிக்கை எடுப்பதன் மூலம்தான் எதிரியை முறியடிக்க் கொள்ளும் வாய்ப்பு நமது கைக்கு வரும் என்பது சுதந்திரக் கட்சியின் கருத்து. இப்படி நெருங்கிய துணையும், நட்பும் இல்லாமல் வெளிநாடுகளிடமிருந்து ஒரு குறிப்பிட்ட அவசியத்துக்காக மட்டும் கலந்து பேசுவதோ உதவி பெறுவதோ போதாது. அபாயத்தை நீக்க உதவாது என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. நமக்குள்ள குறைவான வசதிகளை ஆராய்ந்தால் நாம் தன்னந் தனியாக நின்று வெற்றி பெறலாமென்று எண்ணுவது தவறாகும். நேச நாடுகளிட மிருந்து உதவி பெறுவதில் தயக்கம் காட்டி, உள்நாட்டில் சகிக்க முடியாத வரிகளைப் போட்டு மக்களை வருத்தி நிலைமையைச் சமாளித்துவிட முயன்றால், அது பேராபத்தாக முடியும் எனச் சுதந்திரக் கட்சி எடுத்துக் கூறுகிறது.

5. மக்களின் மனோதிடமும், உற்சாகமும்தான் தேசத்தின் பிரதானமான பாதுகாப்பாகும். அரசாங்கத்தின் இன்றையக் கொள்கையின் விளைவாக ஏற்படும் பண வீக்கத்தாலும், விலைவாசி ஏற்றத்தாலும், பெருகி வரும் வரிகளினாலும் மக்களின் மனோதிடமும் உற்சாகமும் பாழாகிவிடும். இன்று அரசாங்கத்தின் கட்டுத்தளைக்குள் அடைபட்டுக் கிடக்கும் இந்திய மக்களின் உற்சாகம் விடுபட்டு, விவசாயத் துறையிலும், தொழில் துறையிலும் முழு உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டாக வேண்டும். அதிக உற்பத்தி ஏற்பட்டால் அதன் பலன் அரசாங்கத்துக்குத்தான் போகும் என்கிற பயம் தோன்றாத வகையில் ஊக்கமளித்தால்தான் உற்பத்தி பெருகும். தேசியச் செல்வத்தைப் பெருக்குவதற்கு இப்படிச் செய்வதுதான் ஒரே வழி.

6. இந்த உப-கண்டத்தின்மீது ஏற்பட்டுள்ள கம்யூனிஸ ஆபத்தைச் சமாளிக்கப் பாதுகாப்பு நடவடிக்கைகளில் பாகிஸ்தானுடைய நல்லுறவும், நட்பும் ஏற்பட வேண்டும். இதை எந்த முறையில் செய்வது என்பதைப் பிரதம மந்திரியின் இஷ்டத்துக்கே யாதொரு நிபந்தனையுமின்றி விட்டுவிட வேண்டும் எனச் சுதந்திரக் கட்சி கருதுகிறது.

7. எதிரியின் தாக்குதலைச் சமாளிப்பதற்காக, அவசியப்படும் அதிகாரங்களை அரசாங்கம் நிர்வகிப்பதில் சுதந்திரக் கட்சிக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் போர் என்பதே இல்லாதபோது, அண்மையில் போர் தொடங்கப்படும் சூசகமும் இல்லாத போது, அவசர காலச் சட்டப்படி அதிகாரங்களைக் கால வரம்பின்றி நிர்வகிப்பதைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது. இந்த அதிகாரங்களைக் கொண்டு, குற்றங் குறை தெரிவிக்கிறவர்களை ஒடுக்கவோ, அல்லது காங்கிரஸ் ஆட்சியைப் பலப்படுத்திக்கொள்ளவோ முயலக்கூடாது என்று சுதந்திரக் கட்சி வற்புறுத்திக் கூறுகிறது.

8. நம்முடைய எதிரிகளோடு கொள்கையில் ஒன்றாக நிற்கும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் அபாயத்தைக் கவனிக்காமலிருக்கலாகாது என்று பொதுமக்களையும் சர்க்காரையும் சுதந்திரக் கட்சி எச்சரிக்கை செய்கிறது.

9. தங்கக் கட்டுப்பாடு உத்தரவும், தங்க ஆபரணங்களில் பணத்தைப் போட்டு முதலீடு செய்யும் நம் பாரம்பரிய பழக்க வழக்கங்களில் தலையிடுகிற அரசாங்கத்தின் போக்கும் மக்களிடையே பெரும் குழப்பத்தையும் கஷ்டத்தையும் ஏற்படுத்தியுள்ளது. இதனால் ஒரு சிறந்த தொழிலில் ஈடுபட்டுள்ள பெருந் தொகையினராகிய பொற் கொல்லர் வேலை இழந்து தவிப்பதோடு, கிராமப்புறங்களில் சாதாரண மக்கள் இந்த நகைகளைக் கொண்டு கடன் வாங்கும் நடைமுறையும் பாதிக்கப்பட்டுக் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. மக்களின் வாழ்க்கையில் இப்படித் திடீரெனத் தலையிட்டிருப்பது நியாயமற்றதும், விவேகமற்றதும் ஆகும்.

10. இந்தத் தவறான கொள்கைகளையெல்லாம் சர்க்கார் கைவிடாதிருக்கும் வரை, நிரந்தர ஆபத்தாக இப்போது உருவெடுத்திருக்கும் சீன அபாயத்தை நாம் சமாளிப்பது என்பது முடியாத காரியம் எனச் சுதந்திரக் கட்சியின் அகில இந்திய தலைமைச் சபை திடமாகக் கருதுகிறது.



**உங்கள்**
**நலனுக்கு**
**சேமிப்பதே**
**நாட்டின்**
**பாதுகாப்புக்கு**
**உதவியதாகும்**

நாட்டின் தேவைகளுக்கொப்ப உங்கள் பொருளாதாரத் திட்டம் அமையட்டும். இந் நெருக்கடி காலத்தில், எதையும் வீணாக்காமல், நீங்கள் சேமிப்பை வளர்ப்பதால் நாட்டின் பாதுகாப்பு வலுவடைகிறது. ஆகவே, நீங்கள் எங்களிடம் சேமிப்பது, உங்களுக்கும் உங்கள் குடும்பத்திற்கும் எதிர்காலப் பாதுகாப்பு செய்ததாகும். நாட்டின் பாதுகாப்பே உங்கள் பாதுகாப்பு.

# இந்தியன் பாங்க் லிட்.

அதன் ஏராளமான கிளைகளுடன் உங்களுக்கு பலவகைப்பட்ட சேமிப்புத் திட்டங்களை வழங்கி உதவுகின்றது




(நிறுவனம் 1907)

பதிவு அலுவலகம்: இண்டியன் சேம்பர் பில்டிங்ஸ், எஸ்ப்ளனேட், சென்னை-1

தயவு செய்து உங்களுக்கு அருகிலுள்ள இந்தியன் பாங்க் கிளைக்குச் சென்று பரிவு மிக்க நண்பரான ஏஜண்டைச் சந்தியுங்கள்

ஜீ. எஸ். சுந்தரம், காரியதரிசி

# போகிற போக்கில்...

சிட்டுக் குருவி

பிப்ரவரி 10ம் தேதி மாலை. பம்பாய் சிவாஜி மைதானம். பிரம்மாண்டமான கூட்டம் நடக்கிறது. ராஜாஜி, ஆசாரிய ரங்கா, காயத்ரி தேவி முதலியோர் பேசுகிறார்கள். ஸ்ரீ டாண்டேகர் தலைமை வகிக்கிறார். நேருவின் அயல்நாட்டுக் கொள்கையை ரங்கா அவர்கள் அலசிக் காட்டுகிறார். அதில் உள்ள ஓட்டை உடைசல்களைப் பார்த்து மக்கள் சிரிக்கிறார்கள். அப்போது ஒரு சிலர் 'நேரு ஜிந்தாபாத்' என்கிறார்கள். பதில் குரல் கொடுக்க ஆளில்லை. இருந்தவர்கள் காங்கிரஸார் போட்டி போடுவது போல் ஏற்பாடு செய்திருந்த திரு சாவன் கூட்டத்துக்குப் போய் விட்டார்களோ என்னவோ?



ராஜாஜி பேசுகிறார். ''நேருஜி நீடூழி வாழ வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். அதே நேரத்தில் அவரது விவேகமும் பெருகவேண்டும் என்கிறேன்'' என்று கூறுகிறார். கூட்டமே சிரிக்கிறது. ஜிந்தாபாத் போட்டவர்கள் முகத்தில் ஈயாடவில்லை.

தங்கக் கட்டுப்பாட்டு உத்தரவின் ஊழல்களை ராஜாஜி புட்டுப் புட்டுக் காட்டுகிறார். கூட்டத்தினர் ராஜாஜியின் வாக்கியங்கள் முடிவதற்கு முன்பே கரகோஷம் செய்கிறார்கள். நேசநாடுகள் உறவு பற்றி அடுத்துப் பேசுகிறார். ருஷ்யா போர் விமானங்களை அனுப்பும் விதத்தைக் கீழ்வருமாறு வருணித்த போது சபையின் சிரிப்பொலி கட்டு மீறுகிறது.

''ஒரு புது மோட்டார் வாங்கி, கட்டை வண்டியில் அதை இழுத்து வந்தால் எப்படி இருக்கும்? ருஷ்ய விமானங்கள் அது போலத்தான் இப்போது கப்பலில் வந்து கொண்டிருக்கின்றன......''

ஃ ஃ ஃ

கூட்டத்தில் இருந்த பெண்களின் எண்ணிக்கைக்கும் குறைவில்லை. அவர்களும் ராஜாஜியின் ஹாஸ்யத்தை ரசிக்கத் தவறவில்லை.



காயத்ரி தேவி

''நகை நட்டு இருந்தால் வீட்டுக்கு ஒரு பாதுகாப்பு. ஆபத்து — அவசர நேரத்தில் அது பெரிதும் பயன்படும். இந்தப் பாதுகாப்பைப் பெண்கள்தான் சரியாக நிர்வகிக்க முடியும். ஓர் உதாரணம் சொல்லுகிறேன். ஏதாவது கஷ்டம் வந்து புருஷன் மனைவியிடம் நகை கேட்கிறான். அந்த நகையைக் கொடுப்பதற்குள் மனைவி எத்தனை கேள்வி கேட்கிறாள். இலேசில் கொடுப்பாளா? இது மாதிரி சர்க்காரில் பத்திரமாக நமது தங்கம் இருக்குமா?''

சிவாஜி மைதானமே சிரிப்பில் குலுங்கியது.

ஃ ஃ ஃ

தடபுடலாக வந்த தங்கக் கட்டுப்பாட்டு உத்தரவால் கிடைக்கும் பலாபலன்கள் பற்றிச் சில ருசிகரத் தகவல்கள் கிடைத்திருக்கின்றன. அந்தத் தகவல்களை லாப—நஷ்டக் கணக்கில் நாம் பார்ப்போம்.

லாபம்: இந்தியாவில் உள்ள மொத்தத் தங்கம் சர்வதேசக் கணக்குப்படி 11 கோடி அவுன்ஸாம்.

இந்தப் பதினொரு கோடி அவுன்ஸ் தங்கத்துக்குச் சர்வதேச விலைப்படி உள்ள ரொக்கம் ரூ. 1,800 கோடியாகும்.

மக்களிடம் சேமிப்பாகவும் ஆபரணங்களாகவும் இருக்கும் இந்தத் தங்கம் மொரார்ஜியின் அரசாங்கச் செலவுகளுக்கும், நந்தாவின் திட்டச் செலவுகளுக்கும் போகப் போகிறது. இதை 'லாபம்' என்றே சர்க்கார் போல நாமும் சொல்லிவிட முடியுமா?

முதல் திட்டம் 2500 கோடி ரூபாய் என்றார்கள். அப்படியே செலவழித்துக் காட்டினார்கள். கஷ்டம் தீரவில்லை! இரண்டாவது திட்டம் 4500 கோடி என்றனர். கஷ்டம் தீர்ந்ததா? இல்லை!

மூன்றாவது திட்டம் 12000 கோடி என்றார்கள். இதில் இரண்டு ஆண்டுகள் ஓடிவிட்டன. கோடானு கோடியாகச் செலவழித்துக் காட்டுவதிலும் குறைச்சல்

இல்லை. நஷ்டம் தீர்ந்ததா, இல்லவே இல்லை!

ஆகவே இந்த 1800 கோடி ரூபாயும் எந்த மூலைக்கு! கடலில் கரைத்த பெருங் காயம்தான். கடலும் மணக்காது! காயமும் மிஞ்சாது!

லாபம் இருக்கிறதோ, இல்லையோ நஷ்டம் நிச்சயமாக இருக்கிறது.



கலைத் திறன் மிகுந்த லட்சக்கணக்கானவர்கள் தங்கள் கலைத் திறன் மிகுந்த தொழிலை இழக்கிறார்கள்.

லட்சக்கணக்கானவர்கள் தொழிலை இழக்கிறார்கள் என்றால் அவர்களை அண்டி யிருப்போர், தலைக்கு நாலுபேர் வீதம், இன்னும் பல லட்சம் பேர்கள். இவர்கள் யாவரும் நிராதரவு அடைகின்றனர்.

இத்தனை பேர் திருவோடு எடுக்கச் செய்யும் திட்டத்தை எப்படி ஆதரிப்பது?

ஃ ஃ ஃ

தங்கமிருந்த போது தாய்மார்கள் தலை நிமிர்ந்து நடந்த நடையையும், இனி நடக்கப் போகிற நடையையும் எண்ணிப் பார்த்தால் இரண்டாவது நஷ்டம் புரியும். முன்பு தட்டு முட்டுச் சாமான் வாங்கக் கணவன் கொடுக்கும் பணத்தில் தாய்மார்கள் சிக்கனம் செய்து 'திருவாடு' கட்டித் தங்கத்தை வாங்குவார்கள். இந்தச் சிக்கனம் போய் விடும்; அல்லது சிக்கனத்தில் மிஞ்சும் பணம் படாடோபச் செலவினங்களில் விரயமாகும். இது பெரியதொரு நஷ்டம். நிலையாக நிற்கும் சொத்துக்களில் மக்களின் சேமிப்பு பயனுகாமல் வீண் இனங்களில் பாழாவது பொருளாதாரத்துக்கு மிகவும் ஊறு விளைவிக்கும்:

மூன்றாவது பெரிய காரியம், இந்தத் தங்கம் தேசத்தில் இருக்கிற வரை 1800 கோடி ரூபாய் சொத்து மக்களிடம் இருப்பதாகக் கணக்கு. இந்தச் சொத்து 'தற்போதைய உத்தரவால் துப்பாக்கிகளுக்காகவோ வேறு பல சாமான்களுக்காகவோ கப்பல் ஏறப் போகிறது. கப்பலேறி விட்டால் திரும்ப வருமா என்பதை விவரிக்க அவசியமில்லை. யானை வாய்க் கரும்பு தான்.

ஃ ஃ ஃ

டாங்கனிகாவைச் சேர்ந்த மோஷியில் நடந்த ஆசிய — ஆப்பிரிக்க நாடுகளின் மகாநாட்டு நிகழ்ச்சிகள் இந்தியாவின் கண்களை அகலத் திறக்க உதவும். இம் மகாநாட்டுக்கு இந்தியப் பிரதமர் வாழ்த்துச் செய்தி அனுப்பினார். இந்தியத் தூதுகோஷ்டியும் சென்றிருந்தது. இந்திய எல்லைத் தகராறு பற்றித் தீர்மானம் வருவதைச் சீனப் பிரதிநிதி எதிர்த்தார். இந்தியப் பிரதிநிதிகள் வெளி நடப்பு நடத்தித் தீர்மானத்தை ஏற்க வைத்தார்கள். ஏற்க வைத்து விட்டு விமானத்தில் ஏறி வந்தும் விட்டனர். பிறகு நடந்தது என்னவென்றால் தீர்மானம் மாற்று உருக்கொண்டு நிறைவேறி விட்டது.

மோஷி மாநாடு ஆசிய — ஆப்பிரிக்க ஒற்றுமை எந்த மட்டில் இருக்கிறது என்பதையும் காட்டி விட்டது. அதாவது இந்தியாவுக்கு இந்த நாடுகளின் உதவியோ, அநுதாபமோ துளிக்கூட இல்லை. அத்தனையும் பீகிங்கும், மாஸ்கோவும் வளர்க்கும் பிள்ளைகள்.

தீர்மானம் மாற்று உருக் கொண்டதைக் கண்ட இந்தியப் பிரதிநிதிகள் ''நாங்கள் ஏமாற்றப்பட்டு விட்டோம்'' என்று புலம்புகிறார்கள்.

இந்த ஏமாற்றுப் படலம் சீனருக்குச் சர்க்கரைப் பொங்கல் போலும். ஆனால் இந்திய மக்களுக்கு இது வேம்பாகி விட்டது. செப்டம்பர் எட்டாம் தேதி சீனர் தாக்கிய போது நேரு இப்படித்தான் ''ஏமாறி விட்டோம்'' என்று பல தடவை கூறினர். அதற்கு ராஜாஜி, ''எதிரியின் வேலை ஏமாற்றுவதுதானே?'' என்றார். அதற்குப் பிறகு சில வாரங்களுக்கு ''ஏமாந்தோம் — ஏமாற்றப் பட்டோம்'' என்ற வார்த்தைகள் வரவில்லை. இப்போது மோஷியில் திடீரெனத் தலையெடுத்திருக்கிறது.

## தலைநகரிலே நாடக விழா

புதுதில்லி ரசிகர்களுக்குத் தொழில் நடிகர்களும், அமெச்சூர் நடிகர்களும் சேர்ந்து மார்ச் 1, 2, 3, 4 தேதிகளில் அளிக்கும் நாடக விழாவைக் காணும் வாய்ப்புக் கிடைக்கவிருக்கிறது. சென்னையிலிருந்து சேவா ஸ்டேஜின் திறமையான நடிக நடிகைகளோடு புதுதில்லி தென்னிந்திய தியேட்டர்ஸ் நாடகக் குழுவினரும் சேர்ந்து நாடகங்களை நடத்தவிருக்கிறார்கள். சேவா ஸ்டேஜ் திரு சகஸ்ரநாமம் அவர்களும் புதுதில்லி கட்டூ அவர்களும் டைரக்ஷன் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்களென்றால் நாடகங்கள் சிறப்பாகத் திகழக் கேட்பானேன்? இவ்விழாவில் வசூலாகும் தொகை முழுவதும் தேசிய யுத்த நிதியில் சேர்கிறது.

பிப்ரவரி

# 22

முதல்

சென்னை

சித்ரா

பிரபாத்

சரஸ்வதி

மற்றும்

தென்னாடெங்கும்



தேவர்

பிலிம்ஸ்

# தர்மம் தலைகாக்கும்

டைரக்ஷன் : M.A. திருமுகம்



தயாரிப்பு

சாண்டோ M.M.A. சின்னப்பா தேவர்



NEGATIVE RIGHTS CONTROLLED BY

SEMBI TRADERS

MADRAS 6

ELEGANT

# கருணைக்கரம்

## ஆர். சூடாமணி

அவள் பிரார்த்தனை செய்ய விரும்பினாள்.

கனகாவுக்கு எப்போதுமே தெய்வ பக்தி அதிகம். எந்தத் துன்பத்திலும் எங்கோ தொலைவிலிருந்து தன்னை இதமாய்க் காக்கும் ஓர் அருந்துணையாக அவள் அந்தச் சக்தியை உணர்ந்திருந்தாள். அதைக் காணக் கண் வேண்டாம். கேட்கச் செவி வேண்டாம். பேச மொழி வேண்டாம். அதுவே கண்ணாகவும், செவியாகவும், மொழியாகவும் எல்லாமாகவும் இருந்து உயிரை உயிர்ப்பிக்கும் ஒரு சூக்ஷ்மத் தோழமை. குழந்தைப் பருவம் முதலே கனகாவின் நெஞ்சில் அந்த இருப்பின் உணர்வு தென்றலின் ஸ்பரிசம் போல் பிரித்துரைக்க வொண்ணாத ஓர் இனிமையாய் இருந்து வந்தது. எது வேண்டுமானாலும் எந்த மன அரிப்பாக இருந்தாலும் குழந்தைக் கரங்கள் இணைந்து தலை பிரார்த்தனையில் கவிழும் அதிசயத்தைக் கண்டு எல்லோருமே வியந்திருக்கிறார்கள்.

இன்று அவள் குழந்தையல்ல. இருபத்தேழு வயதானவள். பெற்றோர், உற்றார் என்பார் அனைவரையும் இழந்து தானும் தம்பியுமாய் வாழ்க்கையினிடையே நின்று போராடும் எளிய நிலை அவளுடையது. ஆயினும் இத்தனை சோதனைகளிடையே, இழப்புக்களிடையே, மனத்தில் பக்தியாலான அந்தத் தோழமையின் நிழல் மட்டும் அகலவில்லை. மணமிக்க நறுமலரை யாருமறியாமல் தனி இடத்தில் கொண்டு போய் மோந்து இன்புறுவது போல் தன்னுள் அந்தத் தெய்வ நினைவை நிறைத்துக் கொண்டு



அவள் இன்ப மயமான மணிக்கணக்கில் லயித்து விடுவாள். யாழை மீட்டுக் கரங்களின் புதுப் புதுக் கவர்ச்சியில் தன்னை இழந்து நிற்கும் இசைக் கலைஞனைப் போல் அந்த நினைவின் ஒவ்வொரு சிற்றலையும் அவள் உள்ளத்தைச் சிலிர்க்கச் செய்து உயிர் மூச்சாய்ப் பெருகும். இன்பத்தில் இனிமையாகவும், துன்பத்தில் தாயக

மாகவும் உடன் நின்று உயிரோடு ஒன்றி விட்ட பொருள் அது.

இன்று தாயகம் தேவையா யிருந்தது. அவள் பிரார்த்தனை செய்ய விரும்பினாள். இதயத்தில் சஞ்சலம் வாட்டியது. கவலை நிறைந்த பார்வையைக் கயிற்றுக் கட்டிலின்மீது உறங்கிக்கொண்டிருந்த தம்பியின் மீது நிலைநிறுத்தினாள். அருகில் சென்று அந்த உடலைத் தொட்டுப் பார்த்தாள். அனற் கட்டிகளைத் தொடுத்து வைத்தது போல் எங்கே கையை வைத்தாலும் சுரீரென்று ஜுரத்தின் சூடு.

"இந்தாம்மா கனகம், புழுங்கலரிசி நொய் இல்லே யென்றியே. கொஞ்சம் கொண்டுவந்திருக்கிறேன். கிருஷ்ணனுக்குக் கஞ்சி போட்டுக் கொடு."

அடுத்த 'போர்ஷன்' லக்ஷ்மியம்மாளின் இந்தச் செயல் அந்த நிலையிலும் கனகாவின் உள்ளத்தை நெகிழச் செய்தது.

"ரொம்ப வந்தனம் மாமி. பாவம், உங்களுக்கு எத்தனை சிரமம்?"

"சிரமம் என்னடி? ஒருவருக்கொருவர் ஆபத்துச் சமயத்தில் இதுகூடவா செய்ய மாட்டார்கள்?"

கனகா ஒன்றும் சொல்லாமல் நொய்யை வாங்கிக் கொண்டாள். கஞ்சி போட அவள் விரையவில்லை. கிட்டு கண்ணைத் திறந்தால் தானே? நேற்று மாலையிலிருந்தே இப்படித் தான் இருக்கிறான். வைத்தியர் ஊசி போட்டு விட்டுச் சென்றார். மறுபடியும் இன்று பிற்பகல் வருவார். யார் வந்தாலென்ன, போனாலென்ன? ஊசிக்குச் சிறிதாவது பயன் தெரிந்தால்தானே?

கட்டிலோடு ஒடுங்கித் துணி மடிப்பாகக் கிடந்தான் அவன். சில சமயம் நெஞ்சுக்கு ஒரு பிரமை. மூச்சு வருகிறதா இல்லையா? மார்பு ஏறி இறங்குகிறதல்லவா? இரவில் எத்தனை முறை பிரமை கொண்டு அவன் மார்பை அவள் தொட்டுப் பார்த்து விட்டாள்! அவன் உடலில் சூடு ஏற ஏற அவள் உடல் நீரில் குளித்து எழுந்தது. உடன் பிறந்த பிறப்பு. என்னுடையது என்று சொல்லிக்கொள்ள உலகில் வேறு யார்? குழந்தைப் பருவம் கடந்து இன்று இருவரும் வேலையில் இருக்கிறார்கள். நெஞ்சில் என்னவோ அந்தப் பழைய நெருக்கம்தான். ஒன்றாய் விளையாடிக் கழித்த பருவத்தின் ஒவ்வொரு கணமும் ஒரு சிறு புஷ்பமாக விரிந்து வாழ்வை அழகிய நந்தவனமாகச் செய்து விடுகிறதோ? உடன்பிறந்தவர்கள் என்ற உறவின் தனிச் சிறப்பே இந்த மனமலர்களின் சுகந்தம்தானோ?....

அவனுக்கு ஏதாவது ஆகி விட்டால்?

உடல் முழுதும் புறப்பட்டுப் பாய்ந்த நடுக்கத்துடன் அவள் ஓடிச் சென்று அவன் தோளருகில் படுக்கையில் முகத்தை வைத்துக் கொண்டு கதறிவிட்டாள்.

"அடியம்மா, கனகம்! இதோ பார், இப்படித் தைரியம் இழக்கலாமா நீ? அவனுக்கு ஒன்றும் ஆகாது. எழுந்திரம்மா...."

லக்ஷ்மியம்மாளின் ஆறுதல் வார்த்தைகள் எங்கோ ஒலித்தன. கனகாவின் இதயத்தில் தாங்க முடியாத அழுத்தம். உடல் முழுவதையும் பிய்த்துக் கொள்ளலாம்போல் இருந்தது. தனிமையில் சிக்கி உள்ளம் தாயகத்தை வேண்டி அலறியபோது தெரிந்தும் தெரியாமலும் தானாகவே இயல்பாக எழுந்து நிறைந்தது ஒரே எண்ணம்தான்: 'கடவுள்தான் காக்க வேண்டும்.'

அவள் வாய் உலர்ந்தது. துடிப்பு மிகுந்த விழிகள் குறியின்றி அங்குமிங்கும் சூனியத்தைப் பற்றி இழுத்தன.

"கவலைப்படாதே கனகம். சுவாமி கைவிட மாட்டார்."

அவள் சட்டென்று உடலைச் சிலிர்த்துக் கொண்டாள். ஆம், கைவிடமாட்டார். அவள் பிரார்த்திப்பாள். துயரைக் காட்டித் தயையை அழைப்பாள். என்றென்றும் நீங்காத பக்கபலமாக அமைந்த அந்த நினைவைப் பற்றிக்கொண்டால் பிறகு தடுமாற்றம் ஏது? அவள் பிரார்த்திப்பாள். பிரார்த்திக்க விரும்பினாள்.

ஆழ்ந்த வேதனையிடைத் துடித்த மனத்தளத்திலே அவள் தன்னைத்தான் தேடிப் பார்த்துக் கொண்டாள். பிரார்த்தனை என்ற நிலையை ஏற்கவல்ல தூய்மையில் அவள் மனம் பொலிகிறதா? இம்முறை அவளது பிரார்த்தனை பலிக்க வேண்டும். முன்பு போல் பயனற்றுப் போகக் கூடாது. முன்பு.... முன்பு... ஏன் முன்பு பலிக்கவில்லை? அப்போது அவள் செய்தது மட்டும் பிரார்த்தனை இல்லையா? அதில் படிந்த மாசு என்ன?

அப்போது அவளுக்கு இருபது வயது. தூரத்து உறவினர் ஒருவரது அரை மனதான ஆதரவில் அவளும் தம்பி கிருஷ்ணனும் வாழ்ந்து வந்த காலம் அது. இள வயதிலேயே பெற்றோர்களை இழந்துவிட்ட பின் அன்பை அவர்கள் எங்கும் உரிமையாய் எதிர்பாராததால் அந்தச் சூழ்நிலை அவ்வளவாக வருத்தவில்லை. கிருஷ்ணனுக்கு மனம் புண்படும்போதெல்லாம் "பாரேன் அக்கா!" என்று அவளிடம் வருவான். குழந்தைபோல் அவன் தலையைத் தன் மடிமேல் படுக்க வைத்துக் கொண்டு அவள் ஆறுதல் சொல்வாள். அவளை விட அவன் ஐந்து வயது சிறியவன்.

அவளுக்குமட்டும் என்றுமே மனித ஆறுதல் தேவையெனத் தோன்றியதில்லை. 'மாமா', 'மாமி' என்ற உறவுச் சொற்களுள் புகுந்து கொடுமை இழைத்த அந்தச் சொந்தக்காரர்களின் நடத்தைகளையெல்லாம் அவள் தன் உள்ளத்து அருந்துணையில் மறந்தே போவாள். மனம் சோர்ந்தால் கரங்கள் தாமாகக் குவியும். கண்கள் தாழும். உள்ளம் இறை நினைவில் ஒன்றிப் போகும்.

வகை வகையாய் மாலை கட்டித் துளசி மாடத்தை அலங்கரிக்கும்போது நெஞ்சில் பூக்கும் தண்மை. துதிகளை உதடுகள் உச்சரிக்கையில் எண்ணத்தில் குதி போடும் உவகை. "தெய்வமே!" என்னும்போது மருந்தும் விருந்துமாகி அந்த இனிமை நெஞ்சுக்கு இதமளித்து வாழ்வுப் போரில் கேடயமாய்த் துணை நிற்கும் தெம்பு. இவற்றை மீறி வேறெந்த ஆதரவையும் அவள் நாடவில்லை.

தனக்கு ஒரு வேலையாகி, தம்பியின் படிப்பும் முடிந்து விட்டால் பிறகு கஷ்டங்கள் நீங்கும் என்ற நம்பிக்கையில் அவள் நாட்களை உற்சாகமாகவே கடத்தினாள். அந்த இருபதாம் வயதில் பல வேலைகளுக்கு மனுப் போட்டிருந்தாள். கடைசியில் ஒரு டெலிபோன் கம்பெனியில் 'இன்டர்வ்யூ'வுக்கும் போய்

வந்தான். அவனுக்கு நம்பிக்கை இருந்தது. எப்படியாவது அந்த வேலை கைகூடிவிட்டால் பிறகு அதிகப் பிரச்னை இல்லை. கிருஷ்ணனும் அவ்வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதியிருந்தான். முடிவுகள் வெளியாகும் தேதியும் அண்மையில் இருந்தது.

அதற்குச் சில தினங்கள் முன்புதான் அவன் அவனிடம் ஒரு வாட்டத்தைக் கவனிக்க ஆரம்பித்தாள். அவன் சரியாகச் சாப்பிடுவதில்லை. தூங்குவதில்லை. ஏதோ பிரமை பிடித்து நின்று கொண்டிருந்தான்.

"கிட்டு! என்னடா விஷயம்?" என்றாள் அவள் ஒரு நாள்.

அவன் பார்த்த பார்வையில் ஏக்கமும் பரிதாபமும் நிறைந்தன.

"சொல்லுடா."

"அக்கா...."

"ம், சொல்லு."

"ஒன்றுமில்லை."

"சீச்சீ, என்னிடம் என்ன மறைப்புடா, எதுவானாலும் சொல்லு. என்ன விஷயம்...?"

"வந்து...."

"அக்காவும் தம்பியும் கூடிக் கூடி இழையத்தான் சரியாக இருக்கிறது. கடைக்குப் போகச் சொன்னேனே கிட்டு, போய் வந்தாயா?" என்று கடுமைக் குரல் குறுக்கிட்டது.

"அவன் ஏதோ கனைத்தாற்போல் இருக்கிறான் மாமி."

"இருப்பானடி, இருப்பான். சும்மா உட்கார்ந்து தண்டச் சோறு தின்றால் கனைப்பாய்த்தானிருக்கும்."

ரோசமாய் ஏதோ சொல்லக் கிருஷ்ணன் வாயைத் திறந்தான். கனகம்தான் ஜாடை செய்து அடக்கிவிட்டு, தம்பிக்குச் சிரமமில்லாதிருக்கத் தானே கையில் கூடையுடன் கடைக்குப் புறப்பட்டாள்.

கிருஷ்ணனின் வாட்டம் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது. கனகா கவலையோடு ஒவ்வொரு நாளும் வற்புறுத்திக் கேட்டதின் அவன் கடைசியில் விஷயத்தைச் சொன்னான்:

பரீட்சையில் ஆங்கிலப் பேப்பரில் அவன் சரியாகவே எழுதவில்லையாம். கட்டுரைக் கேள்வி ஒன்றையும் இன்னொரு கேள்வியையும் பதில் சரியாகத் தெரியாததால் விட்டுவிட்டானாம். பரீட்சை முடிவுகள் நெருங்கும் சமயத்தில்தான் அந்தக் கவலை அவனை வெளிப்படையாகவே பிடித்து விட்டிருந்தது.

"இத்தனை நாள் சொல்லவே இல்லையே!"

"சொல்ல என்னமோ போலிருந்தது."

"மற்றக் கேள்விகள் நன்றாக எழுதியிருக்கிறாயல்லவா?"

"ஏதோ சுமார்தான். எப்படியும் இரண்டு கேள்வியை அடியோடு விட்டுவிட்டால் பாஸ் ஆவது சந்தேகம்தானே?"

"ஏன் கெடுதலையே நினைக்கிறாய், கிட்டு? நமக்கு நன்மையாகவும் முடியலாம்."

எத்தனை சொல்லியும் கிருஷ்ணனின் பயம் தீரவில்லை. அவன் முகத்தில் நாளுக்கு நாள் மிகைப்பட்டு வரும் கவலையையும் பதற்றத்தையும் கண்ட கனகாவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அவன் வேதனை, அவள் நெஞ்சை அரித்தது.

அன்று இரவு இரண்டு மணி யிருக்கும். தூக்கக் கலக்கத்தோடு அவள் எழுந்து தன்

ணீர் குடித்து விட்டுத் தன் படுக்கைக்குத் திரும்பிய போது அருகிலிருந்த படுக்கையில் அவன் புரண்டு படுப்பது தெரிந்தது. மெள்ள அவனிடம் சென்று, "தூங்கவில்லையா கிட்டு?" என்று கூறினாள்.

"ம்" என்ற ஒலிதான் வந்தது.

"தாகமாயிருக்கா? தண்ணீர் வேணுமா?"

அவன் ஏதும் சொல்ல வில்லை. அவளுக்கு ஏதோ சந்தேகம் விந்தது. கீழே உட்கார்ந்து அவன் முகத்தைத் தொட்டுத் திருப்பினாள். கண்ணீரின் ஈரம் அவள் விரல்களில் ஒட்டிக் கொண்டது.

"என்னடா இது! கிட்டு, ராஜா, அழு கிறாயா என்ன?" பதறிப் போய் அவன் தலையைத் தன் மடிமீது இருத்திக் கொண் டாள். அவன் மறைப்பின்றி அழுதான்.

"ஏ, கிட்டு அழாதேடா!"

"பரீட்சை போய் விட்டால் நான் என்ன செய்வேன் அக்கா?"

"ஒன்றும் போகாது."

"எத்தனை பெரிய அவமானம்! நம் நிலை யில் பண நஷ்டம் வேறு. மாமாவும் மாமியும் பிடுங்கி எடுத்து விடுவார்கள். உனக்கு என் னிடம் எவ்வளவு பெரிய ஏமாற்றம்...?"

"கிட்டு, கிட்டு...!"

அவள் விசும்பல்களில் அவன் குரல் அமிழ்ந்து போயிற்று. தம்பியின் துயரை அவளால் பார்க்க முடியவில்லை.

திடீரென்று அவள் கரங்கள் குவிந்தன. இதயத்தில் கேடயமாகவும் இன்பக் களஞ்சிய மாகவும் ஒருங்கே திரண்டு நின்ற அமுத நினை வின் நிழலில் அவள் உயிர் உடலுக்குடன் தாயகத்தைத் தேடியது.

அந்த இருண்டபொழுதில், தம்பியின் தலையை மடி மேல் வைத்துக் கொண்டு அவன் துயரில் தான் ஐக்கியமாகி அவள் பிரார்த் தனை செய்தாள்.

"தெய்வமே! ஆண்டவனே! எந்த நிலையி லும் உன்னையன்றி வேறு கதி எனக்கு இல்லை. இவன் பக்கம் இரு. இவன் பயப்படுவது போல் இல்லாமல் பரீட்சை பாஸாகட்டும்." சட்டென்று அவளுக்கு, தான் இரண்டு நாள் முன்பு கம்பெனியில் இண்டர்வியூவுக் குப் போயிருந்தது நினைவுக்கு வந்தது. அந்த வேலை தனக்கு ஆகவேண்டும் என்ற பேராவல் நினைவுக்கு வந்தது. தம்பிக்கு உதவுவதாகத் தோன்றிய ஓர் உத்வேகத்தில் அவள் மேலும் பிரார்த்தனையைத் தொடர்ந்தாள். "தெய் வமே! எனக்கு அந்த வேலை ஆக வேண்டாம். நான் ஏமாந்து போகிறேன். பரவாயில்லை. அதற்குப் பதில் இவனைக் காப்பாற்றி விடு. இவனுக்குப் பரீட்சை பாஸாகட்டும்."

பிரார்த்தனை முடிந்ததும் அவளுக்கு ஒரு வித நிம்மதி ஏற்பட்டது. தெய்வ உதவியை ஊர்ஜிதப்படுத்தி கொண்டு விட்டது போன்ற நிறைவு எழுந்தது.

"அக்கா... அக்கா...!"

"ஒன்றும் கவலைப்படாதே." அவள் பரி வாக அவன் கண்ணீரைத் துடைத்தாள். "எல்லாம்சரி யாகி விடும். ஆண் பிள்ளை இல்லையா நீ? அழலாமா?"

உள்ளத்தில் தோன்றிய ஒரு புது உறுதி யுடன் அவள் நாட்களைக் கழித்தாள். எதற்கோ




''என்ன சித்திரக்காரரே! இந்தத் துணுக்கிலே ஒருவர் வாயிலிருந்தும் மற்றவர் மூக்கிலிருந்தும் பேசுகிற கோளத்தைப் போட்டிருக்கிறீரே என்ன அர்த்தம்?''

''ஒருவர் வாயால் பேசுகிறவர்; மற்றவர் மூக்கால் பேசுபவர்.''

---

காத்திருப்பது போன்ற உணர்ச்சி மனத்தில் நிறைந்தது.

பத்து நாட்களுக்குப் பின் அவள் விஷயத்தைக் கேள்விப்பட்டாள். டெலிபோன் கம்பெனி வேலை பாரிஜாதம் என்ற வேறொரு பெண்ணுக்குக் கிடைத்து விட்டதாம்.

எதிர்பார்த்ததை அடைந்து விட்டாற் போல் கனகா ஒருவித மன நிறைவு பெற்றாள். ஏமாற்றத்தையும் மீறி அவளிடம் புன்னகை எழுந்தது. தெய்வம் அவள் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து அவளுடையதை எடுத்துக் கொண்டு விட்டதால் அவள் கேட்டபடியே தம்பிக்கு வெற்றியைத் தந்துவிடும்.

அப்படி நம்பியது தவறு? ஏன் தவறு? அவளுக்குப் புரியவே இல்லை.

எஸ். எஸ். எல். ஸி. முடிவுகள் வெளியாயின. கிருஷ்ணன் பயந்தது போலவே ஆயிற்று. ஆங்கிலப் பேப்பர் காரணமாக அவன் பரீட்சையில் தோல்வியடைந்து விட்டான்.

அவன் அழுததும் துயர வடிவாய் நின்றதும் அவளுக்கு மங்கலாய்த்தான் தெரிந்தது. அது எல்லாவற்றையும்விட முக்கியமான ஒரு சிக்கலில் தன் வாழ்வின் ஆதாரம் இசைந்து நிற்பதான ஓர் அவசரமும் குழப்பமும் அவளைப் பற்றின.

ஏன் இப்படி ஆயிற்று? இது நாள் வரை நீங்காத நிழலென அவள் அண்டி வந்த இறையருள் பொய்த்து விட்டதா? அவள் என்ன குற்றம் செய்தாள், இந்தத் தெய்வ கோபத்துக்கு இலக்காக? மனம் கசிந்து, உயிர் உருக, அவள் செய்துகொண்ட பிரார்த்தனை வீண் போனதேன்? ஆசை காட்டி மோசம் செய்வது போல் அவள் பதிலுக்குத் தருவதையும் வாங்கிக் கொண்டு, கோரிய வரத்தையும் மறுத்து விட்டதே அவள் நம்பிய தெய்வம்!

சகிக்க முடியாத தனிமைத் துன்பத்தில் அவள் மூழ்கி விட்டாள்.

நினைவுகள் அலைகளாக அடித்ததில் கண்களில் ஈரம் கசிந்தது. கனகா மெள்ளத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள். எதிரே ஜுர வேகத்தில் சலனமற்றுக் கிடந்த சகோதரனை அவள் விழிகள் பாச மிகுதியால் வருடிக் கொடுத்தன. அவன் பிழைக்க வேண்டும். அதற்கு வழி? நினைவு தெரிந்த நாள் முதல் அவள் இதயம் பற்றுக்கோடாய் நாடியது தெய்வத் துணையைத்தான். இப்போதும் அதில் ஆச்ரயம் கொண்டு சுமையை இறக்கிக் கொள்ளவே அவள் மனம் தவித்தது. ஆனால் செய்யலாமா?

ஏழாண்டுகளுக்கு முன் தெய்வம் அவள் கன்னத்தில் அறைந்தது இன்னும் வலித்துக் கொண்டுதான் இருந்தது. மிகவும் தயாளு வென்று நம்பிய எஜமானன் காரணமின்றிக் கடிந்து கொண்டபின் மறுபடியும் அவனை அணுகப் பயப்படும் அடிமையின் நிலையில் அவள் இருந்தாள்.

அந்தப் பிரார்த்தனை வீண் போனபின் அவள் தன் பக்தியைத் தன் சொந்த மனநிறைவுக்காகவும் உணர்ச்சிகள் இதமுறுவதற்காகவுமே வைத்துக் கொண்டு விட்டாள். எதையும் யாசித்துப் பிரார்த்தனை புரியும் இடம் மறுபடியும் அவளுக்கு ஏற்படவில்லை. கிருஷ்ணன் அந்த வருஷம் பரீட்சையில் தேறியது, பிறகு இருவருமாக வேலைக்கு அலைந்தது, கடைசியில் எப்படியோ கலெக்டர் ஆபீஸில் இடம் கிடைத்து இன்று இருவரும் அங்கு குமாஸ்தாக்களாகப் பணி புரிவது — எல்லாம் காலக்கிரமத்தில் நடந்தவை. அந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் அவள் மௌனமாய் ''கடவுளே! நன்றி'' என்று அஞ்சலி செய்தாளே தவிர, எந்தக் கோரிக்கையும் செய்யவில்லை.

இன்று கோரிக்கை செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. உயிர் ஆபத்தில் ஊசலாட அவளது உடன் பிறந்தவன் அப்படி நிலையின்றிக் கிடக்கும்போது யாரையாவது அவனுக்காக மன்றாடாமல் அவளால் இருக்க முடியவில்லை. டாக்டரும் மனிதர்தானே! அவரையும் மீறிய சக்தியைச் சரணடைந்தாலன்றி உள்ளம் வேதனையில் விரிந்து விடும் போல் இருந்தது.

ஆனால் பயத்தை மீறிக் கொண்டு எஜமானனை அணுகிக்கூடப் பயனுண்டா? அவள் பிரார்த்தனைக்குத்தான் வலிமை இல்லை என்றாகி விட்டதே?

''இந்தா, கனகம்! இப்படியே அப்போதிலிருந்து வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்

காத்திருக்கிறாயே, எழுந்திரம்மா. அவனுக்கு ஒன்றும் ஆகாது'' என்று ஆசுவாசப்படுத்தினாள் லக்ஷ்மியம்மாள்.

''ஆகிவிட்டால்? ஏதாவது ஆகி விட்டால்?'' கனகா முகத்தை மூடிக் கொண்டாள்.

''சீ... சீ! இப்படி அதைரியப்படுவாளோ ஒரு பெண்? எழுந்து முகத்தைக் கழுவிக்கொள் கனகம். இப்போது டாக்டர் வந்து இன்னொரு ஊசி போட்டால் எல்லாம் சரியாகி விடும். நான் போய்க் கொஞ்சம் கஞ்சி போட்டுக் கொண்டு வருகிறேன்.'' லக்ஷ்மி அம்மாள் தன் 'போர்ஷ'னுக்குச் சென்று விட்டாள்.

கனகா தம்பியையே பார்த்துக் கொண்டிருந்தாள். உணர்ச்சி பொங்கி வந்தது. களைத்த கண்களில் நீர் பனிப் படலம் விரித்தது. 'கிட்டு, நீ பிழைக்க வேண்டும். யாரிடம் முறையிடுவேன்? எனக்குத் தெரிந்த தாயகம் ஒன்று...தான்.... கடவுளே... கடவுளே.....'

அவள் கரங்கள் குவிந்தன.

அவள் வேண்டுகோள் நிறைவேறினாலும் இல்லையென்றாலும் வேண்டாமல் அவளால் இருக்க முடியாது. அவன் பிழைக்க வேண்டும். கடவுளே, அவன் பிழைக்க வேண்டும்.

நீட்டிக் கிடந்த அவன் வடிவத்தை நீள ஒரு தரம் நோக்கினாள். அவன் உயிர் வேண்டுமென்று அவள் கேட்கப் போகிறாள். உயிர் என்பது எத்தனை பெரிய பொருள்! முன்பு அவனுக்குப் பரீட்சையில் தேர்வைத்தான் அவள் வேண்டியிருந்தாள். அதற்கு ஈடாக, 'எனக்குக் கிடைக்கக் கூடிய உத்தியோகம் வேண்டாம்' என்று கூற முடிந்தது. இப்போது உயிருக்கு ஈடாக அவள் எதைத் தருவதாகச் சொல்வது? தன் உயிரையா? அது பலிக்குமா? தெய்வத்தின் கருணையை வேண்டி நிற்கும் போது அதற்குப் பதிலாய்த் தரப் படுவதற்கு எந்தப் பொருளிடம்தான் போதுமான தகுதி இருக்கிறது?

திடீரென்று தன் கண் முன்னிருந்து ஏதோ திரை அறுந்து விழுந்தாற் போலிருந்தது. உடல் எங்கும் ஒரு கடுமையான ஆட்டம். இதயத்தில் அதிர்ச்சி தாக்கியது. வெறித்துப் பார்த்தவாறே கல்லாகச் சமைந்து போனாள்.

ஆம், அதுதான் உண்மை! அந்த எண்ணத்தில்தான் விளக்கம் அமைந்திருக்கிறது! அவள் முன்பு செய்த பிரார்த்தனையில் படிந்திருந்த மாசு அதுதான்!

தெய்வத்தின் கருணையைப் பெற மனிதன் பதிலுக்கு ஒன்றைத் தருவதா! என்ன அகம் பாவம்! அதுவா பக்தி? அதுவா பிரார்த்தனை? 'என் தம்பிக்குப் பரீட்சை தேறட்டும், அதற்காக என் வேலையை எடுத்துக் கொள்' என்று கேட்டது பிரார்த்தனையா, பேரமா? யாருடன் பேரம்? படைத்தவனுடனா? தெய்வ அருளின் ஒரு சின்னஞ் சிறு துளியேயானாலும் அதை மனிதன் கொடையாய்ப் பெறலாமே யல்லாது விலைகொடுக்கும் தகைமை அவனிடம் இருக்க முடியுமா? அந்த எண்ணத்தில் எத்தனை மமதை! அதை எடுத்துக் காட்டத்தானோ முன்பு அந்தத் தண்டனை வந்தது? அவளுக்கும் வேலை கிடைக்கவில்லை, அவனுக்கும் பரீட்சை தேறவில்லை. அந்தப் படிப்பினையை இன்று மனம் தன் துயரின் ஆழ்ந்த நெகிழ்ச்சியின் ஒளியில் கண்டு தெளிந்ததோ?

வெகு நேரம் வரையில் அவள் ஸ்தம்பித்த நிலையிலேயே இருந்தாள்.

அவள் கண்கள் மிருதுவாயின. ஈரம் படிந்த இமைகள் மெள்ள மூடிக் கொண்டன. கரங்கள் குவிந்தன. சிரம் தாழ்ந்தது. அவள் மனம் இப்போது எவ்விதம் புறப் பொருளுமின்றித் துயரின் புனித வறுமையில் சுடர் விட்டது. அதில் வேறு எதுவுமே இல்லை.

''தெய்வமே! அவனுக்கு உயிர்ப் பிச்சை கொடு. உன் கருணையை நீ அருள வேண்டும். அதை அடைவதொன்றே என்னால் இயலும். விலை கொடுக்க இயலாது. கொடுக்க வேண்டிய அவசியமும் இல்லை. உன் கருணை அளிப்பதை என் வறுமை ஏற்கிறது. அதற்கு மேல் வேறேதும் இல்லை. அதுவே நம் பந்தம்; நம் இடையறாத பிணைப்பு. உன்னிடம் வேண்டுவது இது என் உரிமை, என் சலுகை. எனக்கு அதில் தயக்கம் கிடையாது. தந்தையிடம் எத்தனை பெரிய பொருளைக் கோரவும் குழந்தைக்குத் தயக்கம் இருக்காது. உன்னிடம் யாசிக்கிறேன். அவனுக்கு உயிர் கொடு.''

அந்தப் பிரார்த்தனை படரப் படர அவள் நெஞ்சில் ஒரு தண்மை பரவலாயிற்று. யாரோ ஆப்தரிடம் தன் சுமையைக் கொடுத்து விட்டது போன்ற ஆறுதலும் உணர்வாயிற்று.

அவள் அங்கங்கள் புல்லரித்தன.

''இந்தாம்மா, கஞ்சி.'' அவள் பார்வை யற்ற விழிகளால் நிமிர்ந்து பார்த்தாள். கண்ணிரிடையே உதடுகள் துடித்தன. கூடவே அளமதி புதுப் பலம் கொண்டது போன்ற ஓர் அமைதி.

சட்டென்று அவள் நெஞ்சில் ஓர் உறுதி எழுந்தது. இம்முறை தன் பிரார்த்தனை நிறைவேறி விடும் என்று. அதை ஆமோதிக்கும் குரல் போல் வாசலில் டாக்டருடைய மோட்டார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

## நடேசய்யர் மறைவு

ஸ்ரீ எஃப். ஜி. நடேசய்யர் அவர்களின் மறைவு நாடகக் கலையில் ஈடுபாடுள்ள யாவருக்கும் பெரு வருத்தமளித்த நிகழ்ச்சியாகும். தென் இந்திய ரயில்வேயில் உயர் அதிகாரியாகவும், திருச்சி நகரசபையின் சேர்மனாகவும் இருந்த இவர் அந்நாட்களில் நாடக மேடையிலும், வெள்ளித் திரையிலும் தோன்றி நடித்தது அந்தத் துறைகளுக்கே ஒரு கௌரவத்தை அளித்தது. நடேச அய்யர் அவர்கள் தேச பக்தியிலும், தெய்வ பக்தியிலும் சிறந்து விளங்கி நற்பணிகள் புரிந்ததைத் தமிழ் மக்கள் என்றும் நினைவில் வைத்துக் கொள்வார்கள். ஸ்ரீ நடேசய்யர் குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.


ஜெயராமன் தான் மணக்க விரும்பும் கன்னியைப் பற்றிக் கூறிய போது
டேய், ஜெயராம்! இன்றைக்குத்தானடா என் மனம் குளிர்ந்திருக்கு. அவள் ஏழையானால் என்ன? உனக்கு ஏற்றவளா என்பதுதான் முக்கியம். நாளைக்கு அவளை இங்கு அழைத்து வா.
ஆகட்டுமப்பா.
கதை: கௌசிகன்
சந்திரனே சாட்சி
சித்திரம்: வினு
10


ஆனால் இந்த மகிழ்ச்சியே அவரை மரணத்தின் வாயிலுக்குக் கொண்டு போனது.
டாக்..டர்?
இன்று காலை ஏதாவது எதிர் பாராத செய்தியைக் கேட்டாரா உன் அப்பா?


பல நாளாக எதிர் பார்த்திருந்த என் கல்யாண விஷயம் இன்று காலையில் தான் முடிவாயிற்று. இன்று காலையில் வழக்கத்தை விடத் தெம்பாக இருந்தாரே
ம்.. அவருடைய பலவீனமான இருதயத்துக்கு இந்த மகிழ்ச்சியைத் தாங்கும் சக்தி இல்லை. ஆகவே...


அப்பா, அப்பா! இப்படி என்னை அநாதையாக்கி விட்டுப் போய்விட்டீர்களே, அப்பா.


ஜெயராம்....?
உன்னை உடனே பார்க்க வேண்டுமென்று இன்று காலையில்தான் சொன்னார், கன்னி! யாரையுமே பார்க்காமல் போய்விட்டார்.

அருமைத் தந்தையை இழந்து தவிக்கும் உங்களுக்கு சாந்தி தரும் விதமான தேறுதலும் ஆறுதலும் அளிக்கக் கூடாதவள் நான். இருந்தாலும்...
படுக்கையிலிருந்தபடியே தொழிற்சாலையின் நிர்வாகத்தை நடத்தி வந்தார், நளினி! இனி நான் தனியாக என்ன செய்யப் போகிறேன்! எனக்கு ஒன்றுமே புரிய வில்லை...
அவனுக்கு உலகத்தைப் புரிய வைக்க வந்து சேர்ந்தார் சிவஞான மாமா தயாபரர்.
என்ன இயமாய்...! அப்பா எப்படித் திடீ ரென்று?
மாமா, எனக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருக்கிறது. உங்களைத் தவிர எனக்கு வேறு யாருமில்லை.
அதைரியப்படாதே மகனே. என் அருமைச் சகோதரியின் மகன் உன் கலங்கிய நிலையைப் பார்த்துக் கொண்டிருப்பேனா நான்? இனி எல்லாவற்றையும் நான் கவனித்துக் கொள்கிறேன்.
~ ~ நாட்கள் உருண்டன ~ ~
நளினி, நம் திருமண விஷயமாக உன் பெற்றோரிடம் ஏதாவது பேசினாயா?
இந்தச் சமயத்தில் இதற்கென்ன அவசரம் என்றிருந்தேன்.
இனி அவசரப்படுத்த வேண்டியது நீதான் நளினி.
இன்றைக்கே இதைப்பற்றி என் அம்மாவிடம் பேசுகிறேன். சர்க்கரை ஆலையின் முதலாளியே தம் மருமகப்பிள்ளையாக வருவதை வேண்டாமென்று சொல்லப் போகிறார்கள்?
அம்மா, உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்.
சொல்லேன். பீடிகையைப் பார்த்தால் பயமாக இருக்கே!
ஒன்றுமில்லை!

# இருமலை அகற்றச்

சாப்பிடுங்கள்

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்

—வெறும் மருந்துமட்டுமல்ல, நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்குமாகும்!




வாழையடி வாழையாகக் குடும்பத்தினர் நல்லதென நம்பிக்கைகொள்ளச் செய்யும் பல நல்ல காரணங்களுள் நாலு இதோ:

1. இருமலை இமைப்பொழுதில் கச்சிதமாய்க் கரைக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

2. கபம் அறுத்து, நுரையீரலைச் சுத்தப் படுத்தும் கிரியோஸோட், க்வயகால் அடங்கியது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

3. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நோய் நிவாரணியும், நம்பிக்கைக்குகந்த டானிக்கும் ஆகும். நோயை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு உதவுகிறது.

4. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் பசியைத் தூண்டி, ஜீரண சக்தியை வளர்ப்பதுடன், ரத்தத்தைச் சுத்தப்படுத்தி, தாதுப் பொருள் நஷ்டத்துக்கு ஈடுசெய்கிறது.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்



வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி. (வரையறுக்கப்பட்டபொறுப்புடன் யு. எஸ். ஏவில் இணைக்கப்பெற்றது)

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி






## பாமாலிவ் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...

உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வசீகரிக்கும் சுகந்தங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெயுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழுக்கற சுத்தம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அழகு சாதனமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு ஊட்டத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் தூயதாக்கி பளபள புத்துயிரூட்டுவதனால், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரிக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**

# பொன் விலங்கு

மணிவண்ணன்

## ஏழாவது அத்தியாயம்

சத்தியமூர்த்தியின் உள்ளே வருத்திக்கொண்டிருந்த அந்த நேரத்து மனத்தின் கவலைகளும் வேதனைகளும் அப்போது ஏற்பட்ட இந்தத் திகைப்பினால் சற்றே விலகின. எதிர்பாராத வேளையில் எதிர்பாராத சூழ்நிலையில் எதிர்பாராத மனிதரோடு வந்து நிற்கும் அந்தப் பெண்ணின் மேல் அவனுக்கு முதலில் அடக்க முடியாத கோபம் தான் ஏற்பட்டது. அவளை ஏறிட்டுப் பார்த்தாலோ கோபப்படுவதற்கும் கடிந்துகொள்வதற்கும் அவள் பாத்திரமில்லை என்றும் தோன்றியது. அழுது அழுது சிவந்துபோன கண்களும், சோர்ந்து வாடிய முகமுமாக அந்தச் சோர்விலும், வாட்டத்திலும்கூடத் தான் இருப்பதைப் புலப்படுத்திக் கொண்டிருக்கிற அழகும் கவர்ச்சியும் மறையாதபடி காட்சியளித்தாள் அவள். பிரபஞ்சமாகிய பெரிய மலர் தன் உயிர் இதழ்களை ஒவ்வொன்றாக விரித்து மலர்கின்ற அந்த வைகறை வேளையில், நட்சத்திரங்களோடு கூடிய நீல வானத்தின் நெடும் பெரும்பரப்பில் அழகானதொரு பகுதியை அப்படியே கிழித்தெடுத்துச் சுற்றிக் கொண்டு கீழிறங்கி வந்த மின்னலைப் போல் கண்ணில் பதிந்து கொண்டு போக மறுக்கும் கட்டழகாய் எதிரே வந்து நின்றாள் மோகினி. குலை குலையாகத் தொங்கும் கருப்புத் திராட்சைக் கொத்துக்களின் தொகுதியைப் போல் சுருண்டு நெளியும் கருங்கூந்தல், அதில் சிற்றலையோடி மின்னும் கருமையில் ஓர் அழகு. செவிகளின் ஓரங்களில் குண்டலங்களாய்ச் சுருண்டு சுழன்று கொண்டிருக்கும் கேசச் சுழற்சியில் ஓர் அழகு. சவுக்குத் தோப்பில் நீளும் ஒற்றையடிப் பாதையினைப் போல் நடுவே வெள்ளிக் கோடாய் மினுக்கும் நேர் வகிட்டில் ஓர் அழகு — என்று இப்படி ஒவ்வொன்றாய் விரல் விட்டு எண்ணுகிற பல அழகுகளுக்கும் இடமாயிருக்கும் ஒரே ஓர் அழகாக அவள் நிற்பதை அவன் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனாலும் அவனுடைய மனத்தின் கோபம் முழுமையாக அடங்கவில்லை. ''இப்போது என்ன காரியமாக என்னைத் தேடி வந்தீர்கள் இங்கே?'' என்று சத்தியமூர்த்தி அவளைக் கேட்ட கேள்வியில் இப்படி இந்த நிலையில் இங்கே என்னைத் தேடி வந்திருக்க வேண்டாம் என்றோ வந்திருக்கக் கூடாது என்றோ தான் அபிப்பிராயப்படுகிற கடுமை கேட்கப்படுகிறவருக்குத் தெளிவாகப் புரியும்படி தொனித்தது.

''ஒன்றுமில்லை! இதை உங்களிடம் கொடுத்துவிட்டுப்போக வந்தேன். இரயிலில் தவறவிட்டு விட்டு வந்திருக்கிறீர்கள்'' என்று அவனுடைய பேனாவை எடுத்து நீட்டினாள் அவள். அப்போது அவள் எதற்காக அங்கே வந்திருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொண்டு பேனாவை அவள் கையிலிருந்து வாங்கிக் கொண்டபோது சற்று முன்பு தான் அவளைக் கேட்டிருந்த கேள்வியின் கடுமைக்காக நாணினான் சத்தியமூர்த்தி. கண்ணாயிரம் காரின் அருகிலேயே நின்று கொண்டு விட்டார். அந்த முதிய அம்மாள் காருக்குள்ளேயிருந்து கீழே இறங்கவேயில்லை. வீட்டு வாசலில் சத்தியமூர்த்தியும் அந்தப் பெண்ணும் தான் தனியே நின்றுகொண்டிருந்தார்கள். அவன் அவளுடைய உதவிக்காக நன்றி கூறினான். ''பேனாவை இரயிலில் தவற விட்டு விட்டு எப்படி ஞாபகக் குறைவாக வீடுவந்து சேர்ந்தேனென்று எனக்கே தெரியவில்லை. நல்ல வேளையாகக் காப்பாற்றிக் கொண்டு வந்து கொடுத்துவிட்டீர்கள். நிரம்ப நன்றி....''

''வெறும் பேனாவைக் காப்பாற்றிக் கொடுத்ததற்கே இவ்வளவு நன்றியானால் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்தவர்களுக்கு எவ்வளவு நன்றி சொல்ல வேண்டும்?'' என்று சொல்லிச் சிரித்தாள் அவள்.



இப்படி இந்த வாக்கியத்தைச் சொல்லுவதற்குரிய சாமர்த்தியம் அவளிடம் இருந்ததை இரசித்தான் சத்தியமூர்த்தி. அழகிய இதயத்திலிருந்துதான் அழகிய வாக்கியங்கள் பிறக்க இயலுமென்று சில சமயங்களில் அநுமானம் செய்ய முடியும். முகம் அழகாயிருப்பவர்களுக்குச் சித்தமும் அழகாயிருப்பதைப் புரிந்து கொண்டால் எத்தனை பூரிப்பு அடைய முடியுமோ? அத்தனை பூரிப்பைச் சத்தியமூர்த்தியும் அப்போது அடைந்தான். 'சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை' என்ற மாணிக்கவாசகரின் திருவெம்பாவை ஞாபகத்தின் மெல்லிய சாயலாக மனத்தில் தோன்றியது அவனுக்கு. உடம்பு மட்டுமல்லாமல் மனமும் அழகாக இருந்தாலொழிய இவ்வளவு அழகான வாக்கியத்துக்குச் சொற்கள் அவளுக்குக் கிடைத்திருக்க முடியாதென்று சத்தியமூர்த்தி நினைத்தான். 'சித்தம் அழகியார்' என்ற அர்த்த நிறைவுள்ள கவிச் சொற்றொடர் மீண்டும் மீண்டும் அவன் இதயத்தில் புரண்டு எதிரொலிக்கலாயிற்று.

தெருவில் காருக்குள் உட்கார்ந்திருந்த அந்த அம்மாளும், கண்ணாயிரமும் வெறுப்போடு தன் பக்கமாகப் பார்ப்பதைக் கண்டு சத்தியமூர்த்தி அந்தச் சந்திப்பை விரைவில் முடித்துக் கொள்ள எண்ணினான். அவர்கள் பார்வை அவனை வேதனைப் படுத்துவதாக இருந்தது.

''அவர்கள் உங்களை அவசரமாக எதிர்பார்க்கிறார்கள் போலிருக்கிறது. நீங்களானால் என்னோடு பேசிக்கொண்டு நின்றே நேரத்தைக் கழிக்கிறீர்கள்'' என்று அவர்களைச் சுட்டிக் காட்டி அவளிடம் சொன்னான் சத்தியமூர்த்தி.

''இருக்கட்டும்! பரவாயில்லை. இந்தக் குடி கெடுக்கும் கண்ணாயிரத்தைக் கண்டுவிட்டால் அம்மாவுக்குத் தலைகால் பிடிபடாது. வாயெல்லாம் பல்லாகி விடும். ஏதோ கூந்தல் தைலம் தயாரிக்கும் கம்பெனியாம். அதன் விளம்பரத்துக்காக நான் தலையை விரித்துப் போட்டுக் கொண்டு போட்டோவுக்கு உட்காரணுமாம்! எல்லாம் நான் பண்ணின பாவம். என் தலையெழுத்து....''

''போட்டோவை எடுத்தபின் அதற்குக் கீழே 'எங்கள் கூந்தல் தைலத்தை உபயோகித்ததனால் நாட்டிய நட்சத்திரம் மோகினியின் கூந்தல் செழித்திருப்பதைப் பாருங்கள்' என்று விளம்பரம் வேறு செய்வார்கள். இப்போதே நீங்கள் இப்படி நொந்து கொண்டால் என்ன செய்வது?''

''அப்படிச் செய்தால் அவர்கள் மூஞ்சியில் காரித் துப்பிவிட்டு வருவேன். அம்மா கையால் வெறும் தேங்காயெண்ணெயைக் குழப்பித் தடவி வாரிவிட்டு வளர்ந்த தலை இது. 'மயில் தோகை மார்க் கூந்தல் தைலக்காரன்' இதைக் காட்டிப் பெருமை கொண்டாடுகிறதற்கு ஒன்றுமே இல்லை.''

''இப்படி ஒன்றைக் காட்டி மற்றொன்றுக்குப் பெருமை சேர்ப்பதுதான் விளம்பரம்'' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே வீட்டுக்குள் படியேறிப் போவதற்காகத் திரும்பினான் சத்தியமூர்த்தி. கண்ணாயிரமும் அவர் காரில் கொலுவீற்றிருக்கும் முதிய அம்மாளும் கணத்துக்குக் கணம் பொறுமை இழந்து கொண்டிருப்பதைப் புரிந்துகொண்டே அவன் தன் உரையாடலை அவ்வளவு அவசரமாக முடித்துக் கொண்டு உள்ளே போக முந்தினான். அந்தப் பெண்ணோ போய்க் காரில் ஏறிக்கொள்ளவே மனமில்லாதவளாய்த் தயங்கித் தயங்கி ஏதோ இன்னும் சொல்ல வேண்டும் என்றோ, சொல்ல மீதமிருப்பதாகவோ நினைத்து நிற்பது போல் நின்றாள். 'நீங்கள் புறப்படுங்கள். நேரமாகிறது' என்று நேருக்கு நேர் அவளிடம் சொல்லக் கூசியவனாக அதைச் சொல்வதற்குப் பதில் புலப்படுத்தும் நோக்குடனேயே வீட்டுக்குள் போவதற்குத் திரும்புகிறவனைப் போல் திரும்பியிருந்தான் சத்தியமூர்த்தி.

''என்னை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். வருகிறேன்'' என்று சித்திரம் போல் அடக்கமாய் நின்று தெருவில் அவன் கைகூப்பிய காட்சி மிகவும் அழகாயிருந்தது. தான் வாழ்ந்து கொண்டிருக்கிற வாழ்க்கை எதுவோ அது தன் நினைப்பில் இல்லாமல் தன் நினைப்பிலிருக்கும் வாழ்க்கை எதுவோ அதைத் தான் வாழ முடியாமல் வேதனைப்படுகிற அந்த அபலைப் பெண் விடைபெறுகிறபோது இன்னதென்று அறுதியிட்டுச் சொல்ல முடியாததோர் அவல உணர்வு சத்தியமூர்த்தியின் நெஞ்சைப் பிசைந்தது. நெஞ்சுக்கு நேரே சட்டையில் சொருகிக் கொள்வதற்காகப் பேனாவைக் கை மேலே உயர்த்தியபோது அதிலிருந்து ஒரு நறுமணம் அலையாகப் பரவி அவன் நாசியை நிறைத்தது. அந்தப் பெண் மோகினியைப் பற்றிய அநுதாப நினைவை நெஞ்சின் உள்ளேயும், அவள் காப்பாற்றிக் கொடுத்த பேனாவை நெஞ்சின் வெளியேயும் வைத்துக் கொண்டு வீட்டுப் படிகளில் ஏறி உள்ளே சென்றான் சத்தியமூர்த்தி. அப்பா ஊஞ்சலில் உட்கார்ந்தது உட்கார்ந்தபடியே

மலைத்துப் போயிருந்தார். ஆண்டாள் கூடத்தை மெழுகிக் கொண்டிருந்தாள். கல்யாணியும் அம்மாவும் கிணற்றடியில் இருந்தார்கள். அப்போது தந்தையின் முகத்தை ஏறிட்டுப் பார்ப்பதற்கே தயக்கமாகவும், பயமாகவும் இருந்தது அவனுக்கு. வெளியில் எங்கேயும் போகப் பிடிக்காமல் வீட்டுக்குள் இருப்பதும் வேதனையாக மறுபடியும் தன் மேலேயே வெறுப்புப் பிறந்தது அவனுக்கு. எப்படி யெப்படியோ உயர்ந்த இலட்சியங்களோடு வாழ வேண்டும் என்ற ஆசையையும் அப்படி யெல்லாம் வாழ முடியாத வறுமையையும் சேர்த்துப் பொறுத்துக் கொள்ள முடியாத நிலையில் இந்த நாட்டு மத்தியதரக் குடும்பத்து இளைஞர்கள் பலர் இயல்பாக அடையும் மன வாட்டத்தை அப்போது அவனும் அடைந்தான். வாழ்க்கையும் அதன் நீதி நியாயங்களும் ஏதோ ஒரு காரணத்தால் வெறுப்பதற்குரியனவாக அமைந்துவிட்டாற் போல் எண்ணி எண்ணிப் புழுங்கினான் சத்தியமூர்த்தி.

அப்பாவைப் போல் கால் நூற்றாண்டுக் காலத்துக்கு மேலாகப் பள்ளி ஆசிரியராக இருந்து வறுமையால் மனமும் உடலும் தேய்ந்தவர்களைப் பற்றி ஒரு புறமும், கண்ணாயிரத்தைப் போல் குறுக்கு வழியில் தாவி ஓடி முன்னுக்கு வந்து பிரமுகராகி விட்டவர்களைப் பற்றி ஒருபுறமுமாகச் சத்தியமூர்த்தியின் மனத்தில் எண்ணங்கள் மோதின. வாழ்க்கையாகிய பந்தயத்தில் பொய்யையும் வஞ்சகத்தையும் முதலாக வைத்து விளையாடிக் கொண்டிருக்கிறவர்கள்தான் முன்னால் ஓடிக் கொண்டிருக்கிறார்கள் என்ற உண்மையை ஏற்றுக் கொள்ளவும் பொறுத்துக் கொள்ளவும் முடியாமல் இதயம் கொதித்தது அவனுக்கு. இப்படி மனம் தவிக்கும் வேளைகளில் சக்தி வாய்ந்த கருத்துக்களைச் சொல்லும் நூல்கள் எவற்றையாவது எடுத்துப் படிக்க வேண்டுமென்று தோன்றுவது சத்தியமூர்த்தியின் வழக்கம். இன்றும் அவனுக்கு அப்படியே தோன்றியது. அப்பாவுக்கும் அவனுக்கும் காப்பியை எடுத்துக்கொண்டு வந்து வைத்தாள் கல்யாணி. காப்பியைக் குடித்துவிட்டுப் புத்தக அலமாரியிலிருந்து சுவாமி விவேகானந்தரின் சொற்பொழிவுகளும் உபதேச மொழிகளும் அடங்கிய தொகுதி ஒன்றை எடுத்தான் சத்தியமூர்த்தி. எடுத்த எடுப்பில் அவன் கைகள் அந்தப் புத்தகத்தில் எந்தப் பக்கத்தைப் பிரித்தனவோ அந்தப் பக்கத்திலேயே சற்று முன் அவன் மனம் தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்த ஒரு பிரச்னை விளக்கப்பட்டிருந்தது.

—''உனது வறுமையைப் பற்றிய நினைவுகளை நீ ஒரு பக்கம் விட்டுவிடுக. எந்த எந்த வகைகளில் நீ ஏழை? இரண்டு குதிரைகளும் ஒரு வண்டியும் இல்லையென்றோ, அழைத்ததும் ஓடி வந்து முன் நிற்கும் ஏவலாட்களும், பரிவாரமும் உனக்கு இல்லை என்றோ நீ வருந்துகின்றாய்.' அதனால் என்ன? உனது நெஞ்சின் இரத்தம் சொட்டச் சொட்டப் பிறர்க்காக அல்லும் பகலும் நீ உழைப்பாயாயின் நீ செய்ய முடியாமல் போவது எதுவுமில்லை என்பதை நீயே உணர்வாய்.''

எவ்வளவு சக்தி வாய்ந்த கருத்துள்ள வாக்கியங்கள் இவை? சத்தியமூர்த்தி நினைக்கலானான்: 'நானும்தான் இந்த வீட்டின் துன்பங்கள் விடிவதற்காக நெஞ்சின் இரத்தம் சொட்டச் சொட்ட உழைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்! ஆனால் எங்கு உழைப்பது? எங்காவது எப்படியாவது உழைத்துத்தான் ஆகவேண்டுமென்கிறார் அப்பா. 'இந்த விதமான இடத்தில் இப்படித்தான் உழைக்க வேண்டும்' என்று நானாகவே மனத்தில் ஏதேதோ நினைத்துக்கொண்டிருக்கிறேன். அப்படி நினைப்பதும், எதிர்பார்ப்பதும்தான் என்னுடைய அகம்பாவம் என்று அப்பா அபிப்பிராயப்படுகிறார். இனிமேலும் தொடர்ந்து இந்த வீட்டில் அப்பாவோ மற்றவர்களோ என்னைப் பற்றி இப்படி நினைக்க இடமளித்துக் கொண்டு நான் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கக் கூடாது. மல்லிகைப்பந்தல் கல்லூரி வேலையாவது எனக்குக் கிடைத்து நான் அங்கே போய்ச் சேர்ந்துவிட வேண்டும். அந்த ஊரை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அந்தக் கல்லூரியையும் அதன் அமைப்பு முறைகளையும் நான் விரும்புகிறேன். ஆனால் அந்தக் கல்லூரி அதிபருக்கும் முதல்வருக்கும் என்னைப் பிடித்திருக்கிறதா, இல்லையா, என்பதைத்தான் நான் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை' — என்று சத்தியமூர்த்தி தனக்குத்தானே மூழ்கிச் சிந்தித்துக் கொண்டிருந்தபோது, ''சத்யம்! இப்படி வந்துவிட்டுப் போயேன்'' என்று உள்புறமிருந்து அம்மா குரல் கொடுத்தாள். புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, ''இதோ வந்துவிட்டேன் அம்மா....'' என்று உள்ளே எழுந்து சென்றான் சத்தியமூர்த்தி.

அவன் போய்விட்டு வந்த மல்லிகைப் பந்தல் ஊரைப் பற்றியும் அந்த ஊர்க் கல்லூரி வேலையைப் பற்றியும் பெண்களுக்கு இயல்பாகக் கேட்கத் தோன்றும் சில கேள்விகளால் அம்மாவும், அவனை விசாரித்தாள். 'மல்லிகைப்

பந்தல் கல்லூரியில் எவ்வளவு சம்பளம் கொடுப்பார்கள்? எவ்வெப்போதெல்லாம் விடுமுறைக்கு மதுரைக்கு வரலாம்? அந்த வேலையில் மேற்கொண்டு முன்னேற்றத்துக்கு ஏதாவது வழி உண்டா?' — என்பவற்றைப் போல் சாரமில்லாதனவும், அந்த வேலை நிச்சயமாகக் கிடைத்து விடும் போல் பாவித்துக் கொண்டு கேட்கப்பட்டனவுமாகிய பேதைத் தன்மை நிறைந்த அம்மாவின் கேள்விகளுக்கு ஆத்திரப்படாமல் நிதானமாக மறுமொழிகளைச் சொன்னான் சத்தியமூர்த்தி.

''இந்த வேலை நிச்சயமாக உனக்குக் கிடைத்துவிடுமோ இல்லையோ?'' என்று கடைசியாக அம்மா கேட்ட கேள்விக்குத்தான் அவனால் எந்த மறுமொழியையும் உடனே சொல்ல முடியவில்லை.

''என்ன? பதில் பேசாமல் இருக்கிறாய்?'' என்று இரண்டாம் தடவையாகவும் அம்மா அழுத்திக் கேட்டபோது, ''கிடைத்து விடும் என்றுதான் நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன் அம்மா!'' என்று பதில் வந்தது சத்தியமூர்த்தியிடமிருந்து. அதற்குப் பின்பு அம்மா அடுப்புக் காரியங்களைக் கவனிக்கப் போய் விட்டாள். மல்லிகைப்பந்தல் கல்லூரி வேலையைப் பற்றி எல்லாரும் விசாரிக்கிற அக்கறையைப் பார்த்தால் அது தனக்குக் கிடைக்க வேண்டுமென்று அவர்கள் எதிர்பார்ப்பதும் நம்புவதும் அவனுக்குத் தெரிந்தது. ஏமாற்றத்தை ஏற்கவும் தாங்கிக் கொள்ளவும் அதற்கு ஆளாகிறவன் தயாராக இருந்தாலும் அவனைச் சுற்றியிருக்கிறவர்கள் தயாராயிருக்க விரும்பாத சில சந்தர்ப்பங்கள் உண்டு. தான் இப்போது இருக்கிற சூழ்நிலை அப்படிப்பட்டதென்று சத்தியமூர்த்தி மிக நன்றாக உணர்ந்திருந்தான்.

அப்போது இன்னோர் எண்ணமும் அவனுக்குத் தோன்றியது. 'தான் நலமாக ஊர் திரும்பி வந்து சேர்ந்ததைப் பற்றியும், 'இண்டர்வ்யூ'வின்போது அன்பாகவும், பரிவுடனும் நடந்து கொண்டதற்கு நன்றி சொல்லியும் பூபதி அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினால் என்ன' என்று நினைத்தான். அடுத்த கணமே 'அப்படி எதற்காக எழுத வேண்டும்?' என்ற தயக்கமும் ஏற்பட்டது. நன்றி சொல்வதைச் சிலர் வேறு அர்த்தத்தில் எடுத்துக் கொள்வார்கள். இந்த நன்றியைச் சொல்வதனால் இன்னும் வேறு எந்த உதவியை எதிர் பார்க்கிறார்களோ என்று பயந்து நன்றியை ஏற்றுக்கொள்ளவே தயங்குகிறவர்களும் இருப்பது சத்தியமூர்த்திக்குத் தெரியும். நன்றி என்ற குணத்தின் மானத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் இப்படிப்பட்டவர்களுக்கு நன்றி சொல்வதை நிறுத்தி விட வேண்டும். இதில் பூபதி அவர்களை எந்த வகையில் சேர்ப்பது என்று அந்த ஒரு நாள் பழக்கத்தில் அவனால் தீர்மானம் செய்ய முடியவில்லை.




காலை பத்து மணிக்குக் கிணற்றடியில் குளிக்கப் போனவன்— அப்போதும் பூபதிக்குக் கடிதம் எழுதுவதா வேண்டாமா என்ற இதே சிந்தனையில் தான் இருந்தான். அப்பா டியூஷன் வீடுகளுக்குச் சென்று வர வெளியே போயிருந்தார். அவர் திரும்பி வந்து மறுபடியும் இதைப் பற்றிப் பேச்சைத் தொடங்கினால் என்ன செய்வதென்று திகைப்பாகவும் இருந்தது அவனுக்கு. அந்த நிலையில் நண்பர்கள் யாராவது தேடிவர நேர்ந்து அவர்களிடம் மனம் விட்டுப் பேசினால்கூட நல்லதென்று நினைத்தான் அவன். ஆனால் அவன் எதிர்பார்த்தபடி நண்பர்கள் எவரும் அப்போது அவனைத் தேடி வரவில்லை. வெளியூரிலிருந்த நண்பர்கள் இருவரிடமிருந்து கடிதங்கள் வந்திருந்தன. அவன் குளித்துக் கொண்டிருந்தபோதே முதல் தபாலில் அந்தக் கடிதங்கள் வந்திருக்க வேண்டுமென்று தோன்றியது. தங்கை ஆண்டாள் தபால்காரனிடமிருந்து அவற்றை வாங்கிக் கொண்டு

வந்து வைத்திருப்பாள் என்று நினைத்துக் கொண்டு ஈர உடையைக் களையாமலே கடிதங்களை ஆவலோடு பிரித்தான் சத்தியமூர்த்தி. அவனைப் பொறுத்தவரை அப்போதிருந்த மனநிலையில் இரண்டு கடிதங்களிலுமே சுவையில்லாத செய்திகள்தான் நிரம்பியிருந்தன. 'ஏதாவதொரு கல்லூரியில் விரிவுரையாளராயிருந்து கொண்டே ஐ.ஏ.எஸ். தேர்வுக்குப் படித்து எழுதினால் உனக்கு இருக்கிற பொது அறிவுக்கும் புத்திக்கூர்மைக்கும் நிச்சயமாகத் தேறி விடுவாய்' என்று சத்தியமூர்த்திக்குப் பிழைக்கும் வழியை உபதேசம் செய்திருந்தான் ஒரு நண்பன். பணக்கார வீட்டில் ஒற்றைக்கொரு பிள்ளையாகப் பிறந்து அந்த வீட்டின் முடிசூடா இளவரசனாக இருந்து வரும் இன்னொரு நண்பனோ காஷ்மீருக்கு உல்லாசப் பிரயாணம் புறப்பட இருப்பதாகவும் சத்தியமூர்த்தியும் உடன் வந்தால் தன் செலவில் அழைத்துப் போகத் தயாராயிருப்பதாகவும் எழுதியிருந்தான். படித்துக் கடிதங்களை வைக்கும்போது சத்தியமூர்த்திக்குச் சிரிப்புத்தான் வந்தது.

'ஒரு நண்பன் வாழ வழி சொல்லிக் கொடுத்திருக்கிறான். இன்னொரு நண்பனோ வாழ்க்கையை அனுபவிக்க ஆயிரம் மைல் பயணம் செய்து போய் வரலாம் என்று அழைக்கிறான்! எனக்கென்ன குறை?' — என்று பாதி வேதனையாகவும் பாதி வேடிக்கையாகவும் முணுமுணுத்தபடி உடைமாற்றிக்கொண்டுவர உள்ளே சென்றான் அவன்.

திரும்பி வந்து பன்னிரண்டு பன்னிரண்டரை மணி வரை புத்தகம் படித்துக்கொண்டிருந்தான். புத்தகத்தை மூடிவைத்துவிட்டுப் படித்ததை அசைபோட்டுச் சிந்திப்பதில் சிறிது நேரம் கழிந்தது. அதற்குள் அப்பா வெளியிலிருந்து திரும்பி வந்தார். பகல் உணவுக்கு இரண்டுபேரும் சேர்ந்துதான் உட்கார்ந்தார்கள். சாப்பிடும்போது தந்தை தன்னிடம் ஏதாவது பேசத் தொடங்குவார் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் அப்படி ஒன்றும்நடைபெறவில்லை. சாப்பிட்டு முடித்துக் கைகழுவுகிற வரை இருவரும் எதைப் பற்றியும் பேசிக்கொள்ளவே நேரவில்லை. வாயிலில் இரண்டாவது மெயில் தபால்காரன் சத்தியமூர்த்தியின் பெயரைச் சொல்லி ஓர் உறையை உள்ளே எறிந்துவிட்டுப் போனான். இப்போதும் ஆண்டாள் தான் போய் எடுத்து வந்தாள்.

''இதென்ன அண்ணா? மல்லிகைப்பந்தல் ஊரிலிருந்து வருகிற கடிதம் கூட மல்லிகைப் பூமணம் மணக்கும்போலிருக்கிறதே?'' என்று தங்கை அந்தக் கடித உறையைக் கொடுத்தபோது சத்தியமூர்த்தி அதைக் கையில் வாங்கியதுமே அந்த வாசனையை உணர்ந்தான். 'ஒருவேளை ஆர்டராக இருக்குமோ?'— என்ற பாவனையில் அப்பா அவன் முகத்தை ஆவலோடு நிமிர்ந்து பார்த்துத் தயங்கினார். உறையும் கிழியாமல் உள்ளே இருப்பதும் கிழியாமல் இரண்டு நூலிழை அளவுக்கு ஓர் ஓரமாக உறையைக் கிழித்து உள்ளே இருந்ததை எடுத்தான் சத்தியமூர்த்தி. கடித மடிப்பினிடையே மலர்ந்த புதுமையோடும் இல்லாமல் நன்றாக வாடியும் இல்லாமல் நசுங்கி வதங்கி மணக்கும் குடைமல்லிகைப் பூக்கள் இரண்டு இருந்தன. சத்தியமூர்த்தி ஆச்சரியமடைந்தான். உறையில் குண்டு குண்டாக எழுதியிருந்த முகவரி எழுத்துக்களைப் பார்த்தபோதே அது கல்லூரி ஆர்டராக இருக்க முடியும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. இப்போது அது ஆர்டர் இல்லை என்பதும் நிச்சயமாகி விட்டது. 'ஆச்சரியம்' என்ற வார்த்தையோடு தான் அந்தக் கடிதமும் ஆரம்பமாகியிருந்தது. எழுத்துக்கள் குண்டு குண்டாக வரி பிறழாமல் தேர்ந்து பழகின கை பூத்தொடுத்த மாதிரி இருந்தன.

''....உங்களுக்கு இந்தக் கடிதத்தை நான் துணிந்து எழுதுவதே ஆச்சரியமாயிருக்கலாம். இதை எப்படித் தொடங்குவதென்று எனக்குத் தெரியவில்லை. அப்படியே எப்படி முடிப்பதென்றும், எந்த இடத்தில் முடிப்பதென்றும்கூடத் தெரியாமல் போகலாம். உங்களை எப்படி அழைத்து இந்தக் கடிதத்தை ஆரம்பிப்பது என்று சிந்தித்துத் தயங்குவதிலேயே அதிக நேரம் வீணாகக் கழிந்து விட்டது. அன்பின் பரிபூரணமான தன்மை கனிந்து நிற்கிறாற் போல ஓர் அழகிய அழைப்பைத் தேடினேன். அப்படிப் பல அழைப்புக்கள் அடுக்கடுக்காகத் தோன்றின. எந்தச் சொல் அதிக அழகாயிருக்கும், எதை எழுதினால் உங்கள் மனம் கவரப்படும் என்றெல்லாம் நினைத்து நினைத்துத் தயங்கிய பின் எதையும் எழுதாமல் அழைக்கப்பட வேண்டிய அந்த இடத்தைப் புள்ளிகளால் மட்டும் நிரப்பினேன். பிரியமுள்ள மனிதரை மனப் பூர்வமாகக் கூவி அழைப்பதில் மிகவும் ஆற்றல் வாய்ந்த பதச் சேர்க்கை எதுவோ அது அந்த இடத்தில் உங்களுக்குத் தோன்றட்டும். செய்யலாமா, கூடாதா என்று தயங்கிவிட்டு, முடிவில் செய்யலாம் என்ற நம்பிக்கையுடன்தான் இதை எழுதுகிறேன். இதை எழுத எண்ணிய போதும், எழுதிக் கொண்டு இருக்கும் போதும், நான் அடைந்து கொண்டிருக்கிற உற்சாகத்தை இதற்கு முன்பு எப்போதும் அடைந்ததில்லை. வாழ்க்கை

யில் இப்படி முன் பின் சொல்லிக்கொள் ளாமல் வருகிற மகிழ்ச்சியை என்னென் பது? இப்படி உங்களுக்குக் கடிதம் எழுதத் துணிந்ததைப் பற்றியோ, எழு தியதைப் பற்றியோ நீங்கள் என்ன நினைப்பீர்கள் என்று எண்ணும்போது எனக்குப் பயமாகவும் தயக்கமாகவும் தான் இருக்கிறது. ஆனாலும் இதை நான் உங்களுக்கு எழுதித்தான் ஆக வேண்டும். நீங்கள் ஒரு பாடல்—அப்பா விடம் இண்டர்வ்யூவின்போது சொல் லிக் கொண்டிருந்தீர்களே,......அந்தப் பாடல்தான் எனக்கு இப்போது என் மன நிலையை உங்களிடம் சொல்வ தற்குத் துணையா யிருக்கிறது. நான் உங்களிடம் எதைச் சொல்ல வேண் டுமோ அதைச் சொல்லுவதற்குச் சரி யான வார்த்தை கள் அந்தப்பாடலி லிருந்துதான் எனக்குக் கிடைக் கின்றன. செம் மண் நிலத்தில் மழை பெய்தாற் போல் தான் நானும் இப்போது உங்கள் ஞாபகத்தில் இணைந்து உங்களைச் சார்ந்த தன் வண்ணமாக இருக்கிறேன். உங்கள் செந்தாமரைப் பாதங்களைத்தான் நான் முதன் முதலாக என் கண்களால் பார்த் தேன். அந்தப் பாதங்களைப் பார்த்த பின் முகத்தைப் பார்க்கும் துணிவு எனக்கு வரவில்லை என்பதா, அல்லது அந்தப் பாதங்களிலேயே மேலே எதை யும் பார்த்துத் தவிக்கும் அதிக நோக்க மில்லாமல் என் உணர்வுகள் யாவும் ஐக்கியமாகி விட்டன என்பதா—எப்படிச் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை நீங்கள் என் நிலையில் இருந்தால் இதை இன்னும் அழகாகச் சொல்லுவீர்கள். எனக்கும் சொல்லிக் கொடுப்பீர்கள். வேடிக்கையாகவோ, பிரமையாகவோ, உங்கள் பாதங்களைப் பார்த்தவுடன் எனக்கு ஒரு கற்பனை தோன்றியது. அபூதக் காட்சியாக என் கண்களுக்கு மட்டுமே தோன்றிய அந்தக் கற்பனை பைத்தியக்காரத்தனமாகவும் இருக்க லாம். ஆனாலும் பொய்யோ புனைவோ வெறும் பிரமையோ எதுவாயிருந்தாலும் என் மனத்தில் தோன்றிய அழகை நான் சொல்லுவதற்கு எனக்கு உரிமை உண்டு. உங்கள் கால்கள் மிதித்துக் கொண்டு போகிற இட மெல்லாம் அப்படி நடந்து முடித்த மறு கணமே ரோஜாப்பூப் பூத்துக் கொட்டுவது போல் பிரமையா யிருந்தது. இன்று மாலை தோட் டத்தில் போய் நின்று ரோஜாப் பூக்களைப் பார்த்தபோதும் இதையே நினைத்தேன். இந்தக் கடிதத்தை நான் உங்களுக்குஎழுத நினைத்த தற்குக் காரணம் வேறு. பெண் களால் சுற்றி வளைக்காமல் நேரடி யாக எதையும் சொல்லிவிட முடி யாது. எதையோ அவசரமாகவும் அவசியமாகவும் உங்களுக்குச் சொல்லிவிட நினைத்து வேறு எதை எதையோ வீணுக்கு வளர்த்து எழுதிக் கொண்டு போகிறேன். அதற்காகவும் என்னை மன்னித்து விடுங்கள்.



'இண்டர்வ்யூ' முடிந்ததும் சாப்பிட்டு விட்டு நீங்கள் விடைபெற்றுப் புறப்படு கிற நேரத்துக்கு மழை வந்து என்னைப் பாக்கியசாலியாக்கியது. மழை வந்திரா விட்டால் உங்களைக் கல்லூரிக்கும் பஸ் நிலையத்துக்கும் கொண்டுபோய் விடுகிற வாய்ப்பு எனக்குக் கிட்டியிருக்காது. மழை வந்திராவிட்டால் 'செம்புலப் பெயல் நீர் போல' என்ற உங்கள் உவ மையை உங்களுக்கு முன்னாலேயே பிரத் யட்சமாக நான் புரிந்து கொண்டிருக்க முடியாது. உங்களைப் பஸ்ஸில் ஏற்றி

அனுப்பிவிட்டு வீட்டுக்குத் திரும்பியதும் நான் திகைப்பு அடையும்படியான காட்சி ஒன்றை இங்கே கண்டேன். அதனால்தான் இந்தக் கடிதத்தை நான் உங்களுக்கு எழுத நேரிட்டது. நீங்கள் விண்ணப்பம் அனுப்பியிருந்த அதே தமிழ் விரிவுரையாளர் பதவிக்கு இரண்டாவதாக விண்ணப்பம் செய்திருந்த முதியவர் ஒருவரையும் வரவழைத்துப் பேசிக் கொண்டிருந்தார் அப்பா. இதைப் பார்த்ததும் அப்பாவின் மேல் கோபம் கோபமாக வந்தது எனக்கு. நீங்கள் பேசிய சில வார்த்தைகளால் அப்பாவுக்கு உங்கள் மேல் கோபம் இருந்தாலும் உங்கள் தகுதிகளையும் திறமையையும் ஆர்வத்தையும் அவர் நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார். ஆனால், எங்கள் கல்லூரி முதல்வருக்கு என்ன காரணத்தாலோ உங்கள் மேல் ஒருவிதமான வெறுப்புப் பதிந்து போயிருக்கிறது. இந்த வேலைக்கு உங்களை நியமிக்கக் கூடாதென்பதை அவர் அப்பாவிடம் பிடிவாதமாக வற்புறுத்திக் கொண்டிருக்கிறார். இரண்டாவதாக மனுச் செய்துவிட்டு வந்திருக்கும் முதியவருக்கு முன் அநுபவமும் வயதும் இருப்பதனால் அவரையே தமிழ் விரிவுரையாளராக நியமித்து விடலாமென்பது முதல்வரின் அபிப்பிராயமாக இருக்கிறது. அந்தரங்கமாக அப்பாவுக்கு அந்த முதியவரைப் பிடிக்கவில்லை. மல்லிகைப் பந்தல் கல்லூரியின் இலட்சியங்களைப் புரிந்து கொள்ளாமல் 'சம்பளம் அதிகம்' என்ற ஒரே காரணத்துக்காக மட்டும் ஏற்கெனவே தாம் வேலை பார்த்துக் கொண்டிருக்கிற கல்லூரியை விட்டு விட்டு அவர் மல்லிகைப் பந்தலுக்கு வருகிறாரோ என்று அப்பா சந்தேகப்பட்டுத் தயங்குகிறார். இந்த நிலையில் நீங்கள் ஒரு காரியம் செய்ய வேண்டும். இந்தக் கணமே அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுத வேண்டும். அதில் உங்கள்



இலட்சிய ஆர்வங்களைப் பற்றியும் அப்பாவின் கல்விப் பணியைப் பற்றியும் குறிப்பிடுங்கள். இப்படி உங்களை வற்புறுத்துவதற்கோ, தூண்டுவதற்கோ எனக்கு உரிமை இல்லை. ஆனால் உங்களுடைய பட்டுப் பாதங்கள் மறுபடியும் மல்லிகைப்பந்தலின் செம்மண் நிலத்தில் நடக்கவில்லையானால் எனக்குப் பைத்தியம் பிடித்தாற் போல் ஆகிவிடும். இப்பொழுதே பைத்தியக்காரியாக மாறித்தான் இந்தக் கடிதத்தை எழுதத் துணிந்திருக்கிறேன். என்னால் உங்களை மறக்க முடியாது. கேட்பவர் மனத்தை வசீகரிக்கும் உங்கள் உரையாடல், தொழுவதற்கு ஆசைப்பட்டு ஏங்கச் செய்யும் உங்கள் பாதங்கள், இவையெல்லாம் என் ஞாபகத்தில் பதிந்து கொண்டிருக்கின்றன. நீங்கள் மறுபடி மல்லிகைப்பந்தலுக்கு வந்து கல்லூரியில் வேலை பார்த்துக்கொண்டு இங்கேயே தங்கிவிட வேண்டும். என்னுடைய நினைவுகளால் இதற்காகத் தவம் செய்து கொண்டிருக்கிறேன் நான். நீங்கள் வருவது எங்கள் கல்லூரியின் அதிர்ஷ்டம். கல்லூரி முதல்வர்கூட உங்களுடைய தோற்றத்தினாலும் பேச்சுத் திறத்தினாலும் நீங்கள் மாணவர்களை அதிகம் கவர்ந்து விடுவீர்களோ என்று நினைத்துத்தான் பயப்படுகிறார். பிறருடைய சாமர்த்தியங்களை நினைத்து அவர்களை அருகில் நெருங்க விடாமல் பயந்து ஒதுங்குகிறவர்களில் மல்லிகைப் பந்தல் கல்லூரி முதல்வரும் ஒருவர். இதையெல்லாம் எண்ணி நீங்கள் அச்சமோ, தயக்கமோ அடைய வேண்டிய இல்லை. எனக்காகத் தயவு செய்து அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதுங்கள். முக்கால்வாசி உங்களைப் பற்றி அவருக்கே நல்ல எண்ணம் இருக்கிறது. உங்கள் கடிதம் கிடைத்தால் அவர் முடிவு உங்களுக்குச் சாதகமாக மாறும். பரபரப்போடு எழுதிய இந்தக் கடிதத்தை யாருக்கும் தெரியாமல் நானே இரகசியமாக எடுத்துக்கொண்டு சென்று தபால் பெட்டியில் போடப் போகிறேன். நான் இப்படி ஒரு கடிதம் உங்களுக்கு எழுதியது தவறானால் என்னை மன்னிக்கவும் நீங்கள் தயாராக இருக்க வேண்டும். என்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. உங்களைத் தவிர வேறொருவர் அந்தப் பதவிக்கு நியமிக்கப்படலாம் என்ற எண்ணத்தைக் கூட என்னால் தாங்கிக் கொள்ள முடியாது. மல்லிகைப்பந்தல் ஊரையும், கல்லூரியையும் உங்களுக்கு மிகவும் பிடித்திருப்பதாகக் கல்லூரியைச் சுற்றிப் பார்க்கும்போது நீங்கள் என்னிடம் கூறினீர்கள். அவ்வாறு உங்கள் மனத்தைக் கவர்ந்த ஓர் ஊருக்கு வருவதை நீங்கள் விரும்பத்தானே செய்வீர்கள்? ஆகவே அவசியம் நீங்கள் இங்கேதான் விரிவுரையாளராக வர வேண்டும். என்னை ஏமாற்றிவிடாதீர்கள் சார்!... உங்களை அவசியம் இங்கே எதிர் பார்க்கிறேன்.''

உங்கள், பாரதி.

—என்று கடிதம் முடிந்திருந்தது. 'என்னை ஏமாற்றிவிடாதீர்கள் சார்....' — என்ற வாக்கியம் ஒன்று மட்டும் அந்தப் பெண் அப்படியே எதிரே வந்து நின்றுகொண்டு அழகிய விழிகள் இரண்டையும் சுழற்றி வாய் திறந்து நேருக்கு நேர் பேசுவது போலவே இருந்தது. கம்மென்று நான்கு தாள்களிலும் குடை மல்லிகை மணம் கமழ்ந்தது. மெல்லிய ரோஸ் நிறக் கடிதத் தாள்களை மடித்து மீண்டும் உறையிலிட்டான் சத்தியமூர்த்தி. எதிரே நின்றுகொண்டிருந்த அப்பா நம்பிக்கையோடு அவனைக் கேட்டார்: ''யார் எழுதியிருக்கிறார்கள் இதை? பிரின்ஸிபலா? கல்லூரி நிர்வாகியா? கடிதத்துக்குள்ளே பூக்களை வேறு வைத்திருக்கிறார்களே...?''

ஒரு கணம் சத்தியமூர்த்தி ஒன்றும் சொல்லத் தோன்றாது தன் தந்தையின் முகத்தை நிமிர்ந்து பார்க்கக் கூச்சப்பட்டுத் தயங்கி நின்றான். (தொடரும்)

---



# கடவுளைக் கண்டேன்

◁ காந்தன் ▷

தங்கையின் நல்வாழ்வுக்காக எதையும் செய்யத் தயாராக இருக்கும் ரத்தினம் ஒரு முரடன்; தங்கை கனகாவின் திருமணத் தன்று மணமகனாக வந்த வேலப்பனை அரைப் பைத்தியம் என்று அறிந்து அடித்துத் துரத்து கிறான்; திருமணம் நிற்கிறது: அவன் தந்தை யின் மூச்சும் நிற்கிறது. துயரம் தாங்காமல் ரத்தினம் வீட்டை விட்டு வெளியேறி ராணு வத்தில் சேர்ந்து விடுகிறான். ராணுவத்தி லிருந்து திரும்பி வந்த ரத்தினத்துக்குக் கனகா இறந்து விட்டாள் என்ற செய்தி அதிர்ச்சி யைத் தருகிறது. பணக்காரனான பூபதியின் மகன் சுந்தரம்தான் தன் தங்கையைக் களங் கப்படுத்திக் கைவிட்டு விட்டான் என்ற உண்மை தெரிய வருகிறது. அவன் மீது கொலை காரன் என்ற பழி சுமத்தப் படுகிறது.....

கதை மடங்கி, மடங்கி, வளைந்து வளைந்து வளைந்து சென்று முடிவது போல் பாய்ச்சல் காட்டி விட்டு மீண்டும் தொடர்கிறது!

ராதாதான் பூபதி — அதாவது வில்லன்! கடைசிவரையில் அவருக்கு வேலை இருக்கிறது.

ரத்தினமாக வரும் கலியாண குமார் முரட னாகவும், காதலனாகவும் நடிப்பதோடு கண் ணீர் விட்டுச் சோக ரஸத்தையும் வெளிப் படுத்த முயன்றிருக்கிறார். ஆனால் சோகரஸம் அவருக்குக் கைகொடுக்க மறுத்து விட்டதே! என்ன செய்யலாம்! ரத்தினம் என்ற பாத் திரத்தைப் படைத்த கையோடு அவன் தங்கை கனகாவையும் படைத்திருக்கிறார் கதாசிரியர். ஆனால் அந்தப் பாத்திரம் சரியாக உருவாக வில்லை. கனகா பட்ட அவதிகள் போதா வென்று அவருக்குத் தோன்றியது போலும்! ஓர் அநாதைக் குழந்தையை அவள் தலையில் கட்டிக் கதைக்குத் திருப்பம் கொடுக்க முயன் றிருக்கிறார். அந்தக் குழந்தையின் பலத்தில் படம் பல நூறு அடிகள் வளர்ந்திருக்கிறது!

பூபதியின் மகன் சுந்தரமும் கோணலாகப் போன பாத்திரம்தான்.

ஒரு பாத்திரத்துக்கு அபவாதம், களங்கம், கண்ணீர் என்றெல்லாம் வந்தால் அதை ஏற்கச் சவுகார் ஜானகி வந்து விடுவது வழக்க மாகி விட்டது. அவர் நடிப்பில் விசேஷமாகக் கூற எதுவும் இல்லை. முத்துராமன் சுந்தர மாக வந்து கதையைக் குழப்பி விடுவதற்குப் பெரிதும் உதவியாக இருக்கிறார்.

பூபதியின் தங்கை சித்திரா ஒரு நவநாகரிக நங்கை. அவள், தெரு விளக்குகளைக் கொளுத்தும் முரட்டு ரத்தினத்தைக் காதலித்தாள் என் பதை ஒப்புக் கொள்ளவே முடிய வில்லை. படிப்பில்லாத அந்த முரடன் நல்லவன் என்பதற்காக அவள் நெகிழ்ந்து விட்டாள் என்பது சினிமா உலகில் மட்டுமே காணக் கூடிய அசம்பாவிதம்! அதுவும், ஓர் ஏழைப் பெண் மாதிரி வேடம் பூண்டு ரத்தி னத்தைச் சந்திப்பது விந்தையான கற்பனை. ஆனால் தேவிகா அந்தப் பாத்திரத்தை ஏற்று நம் உள்ளம் குளிரத் தோன்றிக் கலையான தோற்றத்துடன் வளைய வருகிறார்.

கதையிலுள்ள பொத்தல்களைச் சரிக்கட்டச் சந்திரபாபு — நாகேஷின் உபகதை உதவிக்கு வருகிறது. பணக்காரனான பூபதியை ஏமாற்றி அவரது கணக்குப் பிள்ளை ஐம்பதினா யிரம் ரூபாயைக் கவர்ந்து கொண்டு போய் ஒரு சோபாவில் வைத்துத் தைத்து விடுகிறார். அதை அறிந்த பூபதி கணக்குப் பிள்ளையின் மகனான சந்திரபாபுவைத் தாஜா பண்ணு கிறார். சோபா காயலாங் கடைக்குப் போய் விடுகிறது. சந்திரபாபுவும் காயலாங் கடைக் காரனாக வரும் நாகேஷும் சேர்ந்து கொண்டு பண்ணுகிற தமாஷ்களும், அட்டகாச ஆர்ப் பாட்டங்களும் சற்று மிகை என்று தோன்றி னாலும் எல்லோரையும் விழுந்து விழுந்து சிரிக்க வைக்கின்றன. சிறந்த ஹாஸ்ய நடிக ரான சந்திரபாபுவுடன் ஈடுகொடுத்து நடிக் கும் நாகேஷ் பாராட்டுக்கு உரியவர்.

கதை, வசனம் தயாரித்தவர் சொர்ணம். கதை ஒரு மாதிரி இருந்தாலும் வசனம் நன்று யிருக்கிறது.

''தீபத்தை வைத்துக் கொண்டு'', ''விடிய விடியப் பேசினாலும் தூக்கம் வராது'' என்ற பாடல்கள் காதில் நன்றாய் ஒலிக்கின்றன.

சந்திரபாபுவின் தமாஷ்களுக்காகப் படத்தை ஒரு தடவை பார்த்து வைக்கலாம்.





# முனீச்வரன்

**சங்கரராம்**

செங்குன்றத்தில் முப்பது வீடுகள் இருந்தால் அதிகம். வீடுகளுக்கு விட்டத்திலிருந்து கூரை வரையில் பனை மரமே ஆதாரம். குன்றைச் சுற்றி இரண்டு மைல் தூரத்துக்குச் செம்மண் மூன்றடி ஆழத்துக்கு நிறைந்து புன்செய்ப் பயிருக்கு என்று ஏற்பட்ட பூமி அது. ஊருக்கு வடபுறம் அடர்ந்த காடுகள். அவற்றில் யானை தவிர மற்ற எல்லாவிதக் காட்டு மிருகங்களும் வசித்து வந்தன. ஆனால் செங்குன்ற வாசிகள் அவைகளைத் தங்களுடைய சத்துருக்களாகக் கருத வில்லை. தங்களைப் போல் வாழ ஆண்டவன் படைத்த ஜீவன்களே என்று நினைத்தார்கள்.

ஒரு நாள் பிற்பகல் மூன்று மணி யிருக்கும். ஒரு மாதத்துக்கு முன் மாமன் வீட்டுக்குச் சென்ற செல்லப்பன் தலையில் ஒரு பெரிய மூட்டையுடன் திரும்பி வந்தான். சுமையை இறக்க அவனுடைய தாயும் தங்கையும் முன் வந்தார்கள். தங்கை அவசரமாக மூட்டையை அவிழ்த்தாள்.

வேர்க்கடலை, ஆள்வள்ளிக் கிழங்கு, வெங்காயம் முதலியவை கலந்து கிடந்தன. அவைகளை உள்ளே பத்திரப்படுத்தும் பொறுப்பைத் தன் தாய்க்கு விட்டு விட்டு, அவனுடைய தங்கை வேர்க் கடலைகளை உடைத்துத் தின்ன ஆரம்பித்தாள். இதற்குள், அவனுடைய தகப்பனும் வரவே எல்லாரும் மாமன் வீட்டு விஷயங்களைப் பற்றி வெகு நேரம் பேசினார்கள். அவன் கொண்டு வந்த சுரைக்காய், பச்சைப் பசேரென்று இருந்ததால், அன்று இரவே சமைத்துவிட வேண்டும் என்று திட்டம் போடப்பட்டது.

அன்றிரவு சாப்பாடு ஒரு விருந்து போல் இருந்ததால் அனைவரும் உண்டுகளித்து உறங்கினர். பதினெட்டுக் கல் நடந்து வந்த களைப்பால், செல்லப்பன் மரக் கட்டை போல் கிடந்து தூங்கினான். இரவு சுமார் ஒரு மணி இருக்கும். அந்தத் தூக்கத்திலும், ஏதோ ஓர் ஓசை அவனுடைய காதில் இலேசாக விழுந்தது. வர வர, ஓசையின் ஒலி வலுத்தது. விழித்தும் விழிக்காமலும் இருந்தான்.

பிறகு வீட்டுக்கு எதிராகவே, ''ஊ...ஊங்.. ஆ....ஆவ்....ஹோ!'' என்றவாறு சத்தம் கேட்கவே, செல்லப்பன் திடுக்கிட்டு எழுந்தான். அது ஒரு மிருகத்தின் குரல் என்பதில் சந்தேகமில்லை. புலியாயும் இருக்கலாம். ஆனால் புலிக்கு அவ்வளவு நிலைக் குரல் ஏது? என்ன துயரம்! படுக்கையில் உட்கார்ந்து கொண்டிருந்த தன் பெற்றோர்களை, ''எது கூவுது?'' என்று ஆத்திரத்துடன் வினவியவாறே கதவைத் திறக்கப் போனான். அவனுடைய தாயும் தகப்பனும் அவனைத் தடுத்து உட்கார வைத்தார்கள். ''அவன் முனீச்வரன்டா!'' என்றான் அவனுடைய தகப்பன்.

''ஊருக்குள்ளே வர மாட்டானே!'' என்றான் செல்லப்பன்.

''பத்து நாட்களாய் வரத் தொடங்கிட்டான் அப்பா! அவன் உடலும் புண்பட்டுப் போச்சு. ஆத்திரப் படாதே. சங்கதியைச் சொல்றேன், கேள். நீ உன் மாமா வீட்டுக்குப் போய் ஒரு வாரம்கூட இருக்காது. அப்போ எவனோ ஒரு பட்டணத்தான் சட்டையையும் குல்லாயையும் மாட்டிக்கிட்டு, கூட ஒரு தடியனையும் அழைச்சிக்கிட்டு வந்து, 'புலி வேட்டையாடணும். அதுக்கு உதவி செய்யறவங்களுக்கு, நூறு இருநூறு வேணுமின்னாலும் கொடுக்கிறேன்'னு சொன்னானாம். இந்தச் சங்கதி முத்தையன் காதிலே விழுந்ததும் அவன் வேட்டைக்கு வந்தவனைச் சுத்திக்கிட்டுத் திரிய ஆரம்பிச்சான்....''

''அப்போ அந்தப் பாவி துட்டுக்கு என்ன வேணுமின்னாலும் செய்வானே! முனீச்வரனைக் காட்டிக் கொடுத்திட்டான்னு சொல்லு!''

''முனீச்வரனை வேறு காட்டிக் கொடுக்கணுமாடா? அவன் பழுத்த பழமாச்சுதே. போன பிறப்பிலே சாமியாராய் இருந்திருப்பான். இப்போ புலியாய்ப் பிறந்து விட்டான். காட்டிலே நினைச்ச இடத்துலே படுத்துக் கிடப்பான். இந்த ஊரிலே அவனைக் காணாதவங்க யாராவது உண்டா?''

''நானே எத்தினியோவாட்டி பார்த்திருக்கேனே, அப்பா! தலையெடுத்துக் கூடப் பார்க்க மாட்டானே — முத்தையன் முனீச்வரனை சுடச் சொன்னான்னு சொல்லு.''

''முத்தையன் அதை ஒத்துக்க மாட்டேங்கிறான். அவங்க போய்க் கொண்டே யிருக்கிற போது, முனீச்வரன் இன்னொரு பக்கமாய்

முன்னங் காலுங்க மேலே தலையை வைச்சுக்கிட்டுப் படுத்திருந்தானும். முத்தையன் வேண்டாம், வேண்டாமின்னு சொல்லும்போதே பட்டணத்துக்காரன் சுட்டுட்டானும்......''

''போய்! போய்! முத்தையனே சுடச் சொல்லியிருப்பான், அப்பா!''

''சுட்டவன், கூறுகெட்ட கழுதை, சாகடிக்கத்தான் செய்தானு? அதுவுமில்லே. கழுதைக்குக் கை நடுக்கம் எடுத்துக்கிட்டதோ, என்னவோ குண்டு முனீச்வரன் மேல் கழுத்தைத் துளைச்சுக்கிட்டுப் போயிட்டுதாம். முனீச்வரன் உறுமலும் புலம்பலுமாய்க் காட்டுக்குள்ளே ஓடிட்டானும். காயம் பட்ட புலியைத் தூரத்திலல் ஆபத்துன்னு அந்தப் பேடிப் பயலுக்கு யாரோ சொல்லி யிருந்தாங்களாம். அவ்வளவுதான், மூட்டையைக் கட்டிக்கிட்டு, வந்த வழியைத் தேடிக்கிட்டு ஓடிட்டான்....''

''நீங்களும் அவனே விட்டுட்டீங்க!'' என்றான் செல்லப்பன் எரிச்சலோடு. ''அவன் துப்பாக்கியைப் பிடுங்கி முனீச்வரனைக் கொன்னு போட்டிருக்கக் கூடாது? இதோ அழுவுதே!'' இப்பொழுது ஊருக்கு வடபுறத்தில் முனீச்வரன் ஈனக் குரலில் புலம்புவது கேட்டது.

''முனீச்வரன் இப்படி வலியோடு தவிக்கிறது எனக்குத் தாங்க மாட்டலியே, அப்பா! நம்ம ஊருக்கு ஒரு தீங்கும் வராமல் காக்கும் முனீச்வரனின்னு தாத்தா அடிக்கடி சொல்வாரே அப்பா — அதோ, அதோ! நான் உங்களுக்கு நன்மை செஞ்சதுக்கு இதுதானுடா எனக்கு நீங்க செஞ்ச உபகாரமின்னு கேக்கிறுப் போல இருக்குதே!'' செல்லப்பனின் வாலிப உள்ளம் துடித்தது.

பிறகு, எதையோ நினைத்துக் கொண்டவன் போல், ''தருமன் அண்ணன் கூடவா சும்மா இருந்தது?'' என்று



விளையினுன். தருமன் செல்லப்பனைவிடச் சிறிது வயதில் பெரியவன். செல்லப்பனைப் போலவே இளகிய மனம் உள்ளவன். எவ்வித நற்பணிக்கும் அஞ்சா நெஞ்சத்தோடு முன்னுல் வருபவன்.

''அது ஒரு பெரிய கதையடா! அவன் கோபத்திலே முத்தையனைக் குத்துயிராய் அடிச்சிட்டான். முத்தையன் மூணு நாளைக்குப் பேச்சு மூச்சில்லாமல் கிடந்தான். எல்லாரும் சேர்த்து தருமனை மணிவிளுந்தானுக்கு அனுப்பிச்சிட்டாங்க. அவன் இப்போ அங்கே பெரிய ஆத்தா வீட்டிலே தான் இருக்கான்.''

எதையோ நினைத்துக் கொண்டவன் போல், ''ஏன் அப்பா, முனீச்வரனை ஈட்டியாலே குத்திக் கொல்ல முடியாது?'' என்று கேட்டான் செல்லப்பன்.

''வேண்டாமுடா! வேண்டாமுடா! என்ன இருந்தாலும் முனீச்வரன் புலி இல்லேயாடா? சாகிற சமயத்திலே கோபத்திலே ஆள் மேலே விளுந்தாலும் விளுவான். அப்புறம், ஈட்டிப் பாய்ச்சல் எவ்வளவு நோவைக் கொடுக்கும்? அது பாவமில்லேயா?''

''ஆமாம், அப்பா! ஆமாம், அப்பா! அந்த யோசனையை விட்டுடறேன். எவனோ கலகம் செஞ்சான்னு இருந்த துப்பாக்கிங்களை யெல்லாம் பிடுங்கிக்கிட்டுப் போயிட்டாங்களே, ஏன், அப்பா! மாட்டரசன் கோட்டையைத் தாண்டித்தானே மணிவிளுந்தானுக்குப் போக வேணும்?''

''இது ஒரு பக்கம், அது ஒரு பக்கமுடா. வேடன் சாவடிக்குப் போய், கிழக்கே ஏழு கல்லுப் போனுல் மாட்டரசன் கோட்டை வருது. மேக்கே, எட்டுக் கல்லுப் போனுல் மணிவிளுந்தான் வருது. எல்லாம் காலேயிலே யோசிக்கலாம், படுத்துத்தூங்குடா. இன்னும் பொழுது விடிய எவ்வளவோ நேரம் இருக்குது'' என்று அவன் தகப்பன் வற்புறுத்தவே, செல்லப்பன் படுத்துத் தூங்கினுன்.

மறுநாள் காலேயில் செல்லப்பன் எழுந்த போது, வெகு நேரமாகி விட்டது. அவசரம், அவசரமாகப் பல் விளக்கிக் கொண்டு, தன் தாயார் தயிருடன் போட்ட பழையதை உண்டான். பிறகு, தன் நண்பன் தருமனைக் காணப்போவதாகவும் திரும்புவதற்கு இரண்டு மூன்று தினங்கள் ஆனுலும் கவலேப்பட வேண்டாம் என்றும் தன் பெற்றோர்களிடம் கூறிவிட்டு, செல்லப்பன் புறப்பட்டான்.

செல்லப்பன் சென்று நான்கு நாட்களாகி விட்டன. அவனுடைய தாயாருக்குச் சிறிது சஞ்சலம் ஏற்படத்தான் செய்தது. ''ரெண்டு பிள்ளேகளுக்கும் பொல்லாத துணிச்சல் ஆச்சே! நல்லதனமாய்த் திரும்பி வரவேணுமேன்னு இருக்குது'' என்று அவள் ஏங்கினுள்.

''அவங்க அறிவாளிங்க. சுகமாத் திரும்பி வருவாங்க. நீ கவலேப்படாதே'' என்று



''பல வாத்தியங்களிருக்க நீங்க கட வாத்தியத்தைப் பழக என்ன காரணமோ?''

''வீட்டுச் சங்கடம்தான்!''

அவளுடைய கணவன் தேற்றினுன்.

ஆயினும் செல்லப்பனின் தாயார் வேலேயில் மனம் ஒவ்வாமல் சமையல் செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுது தெருவில் ஏதோ சந்தடி உண்டாகவே, மற்றவர்களைப்போல் அவளும் வீட்டிலிருந்து வெளியே வந்தாள்.

சிலர், ''மாட்டரசன் கோட்டை மிட்டாதார்?'' என்று இரகசியமாகச் சொல்லிக்கொள்வது, அனைவருக்கும் கேட்கத்தான் செய்தது. மிட்டாதார் ஒரு பெரிய காளைக்கன்றுபோன்ற நாயைப் பிடித்துக்கொண்டு நடந்தார். அல்லது நாயே மிட்டாதாரை இழுத்துக் கொண்டு சென்றது என்று சொல்லலாம். அவருக்கு இருபுறங்களிலும் இரண்டு போலீஸ் சேவகர்கள் துப்பாக்கியுடன் நடந்தார்கள். செல்லப்பனின் தாயார் கும்பலில் ஒருவனை அழைத்து விசாரித்தாள்.

''அவங்க கோட்டையிலே எதுவோ திருட்டுப் போயிட்டுதாம்.''

''அவங்களுக்குக் கோட்டை இருக்குதா என்ன?''

''பெரிய கோட்டை ஒண்ணும் இல்லே, அண்ணி. அதில் சுவருங்க நாலு பக்கத்திலேயும் ஒசப்பா இருக்குது. உள்ளே நுழையறதுக்குப் பத்தடி உயரத்துலே ஒரு பெரிய கதவு இருக்குது. ஆனுல் அவங்க மாட்டுப் பட்டி இன்னும் பெரிசு. இப்போ பட்டிகூடப் போதலேயாம். அவங்களுக்கு ஆயிரக்கணக்கிலே மாடுங்க இருக்குது. அதனுலேதான் யாரோ மாட்டு அரசன்னு பேரை வைச்சுப் புட்டான்.''

''ஆமாம், அந்த நாய் என்னத்துக்கு?''

''நாயா அது? எருமையாட்டம் அல்ல இருக்குது. அது மோப்பத்தாலே திருடினவன் எங்கே போயிருந்தாலும் கண்டு பிடிச்சுடுமாம். அதன் விலே ஆயிரம் ரூபாயாம் அண்ணி!'' என்று கூறிவிட்டு, வேகமாய்க் காட்டை நோக்கி நடந்த கும்பலுடன் அவனும் சேர்ந்து கொண்டான்.

காடு நெருங்க, நெருங்க, ''என்னுங்க, நாய் காட்டிலே இழுத்தடிக்கும் போல் இருக்குதே'' என்றுன் ஒரு சேவகன்.

''என்ன பயம், அய்யா? இரண்டு துப்பாக்கிகள் இருக்கின்றன. ஒரு நாயும் இருக்கிறது'' என்றுர் அவர் அலட்சியமாக. அவ்வட்டாரத்துக்கெல்லாம் பெரிய வேட்டைக்காரர் என்று அவர் பெயர் எடுத்தவர்.

இப்பொழுது காட்டின் அமைதியைக் குலேத்துக் கொண்டு, ''படார்!'' என்று ஒரு குண்டு வெடித்த சத்தம் கேட்டது. அனைவரும் சட்டென்று நின்று விட்டார்கள்.

''ஒரு பத்து நிமிஷம் பொறுக்கலாமுங்க. துப்பாக்கி வச்சிருக்கிறவன்கிட்டே வெகு ஜாக்கிரதையாய்ப் போகணுமுங்க'' என்று பேசிய போலீஸ் சேவகன் எச்சரிக்கை செய்தான்.

மிட்டாதாருக்குச் சிரிப்பு வந்தது. சில நிமிஷங்களுக்குள் காட்டிலிருந்து ஒரு பாட்டு கிளம்பியது. அது ஒரு கவிஞனின் கவிதை அல்ல. எவனோ காட்டான், தன் உள்ளக் கனிவை வெளியிட்டுக் கொள்ளும் வகையில் தன் இஷ்டம் போல் பின்வருமாறு பாடினான்:

'' காட்டரசன் தவிப்பைத் தீர்த்த மாட்டரசன் கோட்டைக்காரரே! உங்க குளந்தை குட்டிங்க நல்லா இருக்கணும். உங்க மாட்டு மந்தைங்க ஆறாப் பெருகணும்.''

மிட்டாதார் திகைத்து நின்றார். ''யார் அப்பா அவன்?'' என்று நாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அவர் விரைந்து சென்றார். சில நிமிஷங்களுக்குள் காட்டினின்று வெளியே வந்து கொண்டிருந்த செல்லப்பன் அவரைப் பார்த்து விட்டான்.

அடுத்த நொடியில், ''கும்பிடுறேனுங்க, எசமான்! கும்பிடறேனுங்க! இதோ, உங்க துப்பாக்கி. நானே கொண்டு வந்து தர வேணுமின்னு இருந்தேனுங்க. நான் திருடன் இல்லீங்க. எங்க முனீச்வரன் தவித்த தவிப்பை என்னாலே பொறுக்க மாட்டல்லீங்க. அது ஒரு புலிதானுங்க. ஆனால் பழுத்த பழமுங்க. அதாலே எங்க ஊருக்கு ஒரு தீங்கும் இல்லீங்க. எங்களுக்கு நோய் நொடி வராது காத்த சாமின்னு நாங்க நினைச்சோமுங்க. அதை ஒரு பாதகன் மேல் கழுத்துலே கட்டிட்டு, ஓடிட்டானுங்க. எந்தக் காயமாக இருந்தாலும், நாக்காலே நக்கி, ஆத்திக்குமுங்க. ஆனால் மேல் கழுத்தை எப்படி நக்கிக்கும்? தீராத தும்பம் அதுக்கு வந்துட்டுது சீப் பிடிச்சு, தவியாத் தவிச்சுது. அது செத்தால் ஒழிய அதன் துன்பம் நீங்காதுன்னு தெரிஞ்சுக்கிட்டேன். எனக்குக் குறி பார்த்துச் சுடத் தெரியுமுங்க. ஆனால் துப்பாக்கி கிடைக்கல்லியே! யாரும் தரமாட்டேன்னிட்டாங்க. அதனாலே, நம்ப கோட்டையிலே ரெண்டு நாள் வேலை செஞ்சு, துப்பாக்கியோடு மதிலேறிக் குதிச்சு, நேராய் முனீச்வரன் கிட்டே வந்துட்டேனுங்க. நான் திருடன் இல்லீங்க. முனீச்வரன் நோவாலே எப்படித் துடிச்சிருப்பானோ! சீழ் பிடிச்சு, புழுப்பூத்துப் போச்சுங்க! நீங்களே வந்துப் பாருங்க'' என்று அழுதவாறு மிட்டாதாரைப் புலியின் இடத்துக்கு அழைத்துச் சென்றான். கும்பலும் பின்பற்றியது.

புலியின் கழுத்திலிருந்து சிந்தும் புழுக்களை அவர் பார்த்தார். அவர் மனம் இளகியது. ''எதற்கும் என்னை நீ கேட்டிருக்கலாம். சரி, போனது போகட்டும். உன் மனத்தை நான் நன்றாய்த் தெரிந்து கொண்டேன். என்னிடம் வேலைக்கு வருகிறாயா? சாப்பாடு துணி மணி எல்லாம் போக மாதம் முப்பது ரூபாய் கொடுக்கிறேன்'' என்றார் மிட்டாதார்.

செல்லப்பன் கைகளைப் பிசைந்தான். ''எசமான்! நான் காட்டிலே பிறந்தவன்; வளர்ந்தவன்; காட்டிலேயே வாழவேணுமின்னு இருக்குது!'' என்றான்.

மிட்டாதார் அவனை ஒரு கணம் உற்றுக் கவனித்தார். ''சரி, அப்படியே செய்! உனக்கு ஏதாவது தேவையாயிருந்தால் என்னை வந்து பார்'' என்று பெருந்தன்மையுடன் கூறி விட்டுச் செல்லப்பன் முதலானோர் பின்தொடர அவ்விடத்தை விட்டு நகர்ந்தார்.



தேசிய பாதுகாப்பு நிதிக்கு தாராளமாகப் பொருள்களை வழங்குங்கள்

## அம்மாடி, என்ன சுகம்!

ஆனந்த ஸ்நானம் ... நாள் முழுதும் சந்தன நறுமண உணர்ச்சி! குளிப்பிற்கே புதியதொரு இன்பத்தை வழங்க... மேனி வனப்பை வளர்க்க

மேட்டூர் சந்தன சோப்!



மேனி அழகிற்கு

# மேட்டூர் சந்தன சோப்

மேட்டூர் கெமிகல்ஸ் இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC 42/7

# பரிசு பெறும் கலைஞர்கள்

கலைஞர்களில் பல வகை உண்டு. நீண்ட காலமாகத் தங்கள் துறையில் கீர்த்தியுடன் விளங்குபவர்கள்; நீண்ட காலத்துக்கு முன் தங்கள் துறையில் புகழுடன் விளங்கி இன்று புகழ் குன்றியும் அதிலேயே நீடிப்பவர்கள்; பழங்காலத்தில் கியாதியுடன் விளங்கி இன்று மக்களின் நினைவிலிருந்தே அடியோடு கழன்றுபோனவர்கள்; நெடு நாட்கள் கலை உலகிலிருந்து சமீபத்தில்தான் புகழுக்கு உரித்தானவர்கள்; கலை உலகின் ஒரு துறையில் புகழ் பெற்று, அந்தப் புகழ் மங்கியபின் வேறொரு துறையில் ஈடுபட்டுப் பெயரெடுத்தவர்கள்—இப்படி. அப்புறம், இன்றைய 'பாப்புலர்' நட்சத்திரங்கள் இருக்கவே இருக்கிறார்கள். இந்த ஆண்டு தமிழ் நாட்டு சங்கீத நாடக சங்கம் பதக்கமளித்துக் கௌரவிக்கப் போகும் இருபத்து மூவரில் இந்த எல்லா வகைகளையும் சேர்ந்தவர்களைக் காண்கிறோம்.

இவர்களில் இன்று புகழ் குன்றியவர்களையோ அடியோடு அஸ்தமித்தவர்களையோ அவர்களுடைய இன்றைய நிலையை வைத்து மதிப்பிடலாகாது. சிலரின் பெயரைக் கூடக் கேள்விப்பட்டதில்லையே என்பதற்காகத் தேர்வு செய்த சங்கீத நாடக சங்கத்தையும் குறை

கோதண்டராமய்யர்
(கடம்)



மாரியப்ப சுவாமி
(சாகித்தியகர்த்தா)



எம்பார் விஜயராகவாச்சாரியார்
(ஹரிகதை)





துரையப்ப பாகவதர்
(கோட்டுவாத்தியம்)



மருங்காபுரி
கோபாலகிருஷ்ணய்யர்
(வயலின்)



வைத்தியலிங்கம் பிள்ளை
(கொன்னக்கோல்)



கல்லிடைக்குறிச்சி
ராமலிங்க பாகவதர்
(பாட்டு)











சொல்லிவிடக் கூடாது. ஒரு காலத்தில் தங்கள் துறையில் பிரபலமாக விளங்கிய அந்தக் கலைஞர்களுக்குப் பரிசு வழங்குவதோடு எதிர்காலத்தைப்பற்றி அவர்கள் கவலைப்படாதபடியும் சர்க்கார் வசதி அளிக்க வேண்டும் என்ற உணர்வு ஏற்பட வேண்டும்.

இசை, நடனம், நாடகம், சினிமா முதலிய துறைகளைச் சேர்ந்த கலைஞர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மேல் 'ஃபீல்ட்'டில் இருக்க முடிவதில்லை. மற்றத் தொழில்களுக்கும் கலைக்கும் இது ஒரு பெருத்த வித்தியாசமாகும். அவர்களைப் பொதுமக்களுக்கு





வழுவூர் ராமையா பிள்ளை (பரத நாட்டியம்)

எம். என். ராஜம் (நாடக நடிகை)

எம். ஆர். ராதா (நாடக நடிகர்)



நினைவுபடுத்திப் பரிசு வழங்கும் நல்ல வழக்கத்தைக் கடைப்பிடித்து வரும் அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம்.

மாரியப்ப சுவாமிகள், கல்லிடைக்குறிச்சி ராமலிங்க பாகவதர், சங்கீத கலாநிதி மருங்காபுரி கோபால கிருஷ்ணையர், திருக்கடையூர் சின்னையா, வைத்தியலிங்கம் பிள்ளை, கே. என். ரத்தினம், புளியம்பட்டி சுப்பா ரெட்டியார், எஸ். ஜே. ஆசாரியா, ஓய். வி. ராவ், கே. சாரங்கபாணி, என். எஸ். கே. மதுரம், ச. து. சு. யோகியார் ஆகியோர் மக்களிடையே எவ்வளவு பிராபல்யம் பெற்றிருந்தார்கள் என்பதையும் இவர்களில் சிலர் எவ்வளவு பிராபல்யம் பெற்றிருந்தார்களோ அவ்வளவு எதிர்ப்பையும் சமாளித்துத் தங்கள் துறையில் துணிச்சலோடு முன்னேறினார்கள் என்பதையும், தமிழ்க் கலை உலகத்திலேயே சில புது அம்சங்களை முதலில் புகுத்தியவர்கள் இவர்களில் சிலர் என்பதையும் நமக்கு நினைவூட்டியிருக்கின்றனர் சங்கீத நாடக சங்கத்தினர்.

பிடில் வாத்தியத்தில் தேர்ந்த மருங்காபுரி கோபாலகிருஷ்ணையர் அந்தக் காலத்தில் நல்ல சாரீரம் படைத்தவராக இருந்ததால், சுவாமி விவேகானந்தர் மானா மதுரைக்கு விஜயம் செய்திருந்தபோது, பாடி அவரது ஆசீர்வாதத்தைப் பெற்றிருக்கிறார். இன்ஜினியரிங் கல்லூரியில் பயின்று சூபர்வைசராகப் பணியாற்றிக் கொண்டிருந்த தஞ்சாவூர் துரையப்ப பாகவதர் சங்கீத வித்வான்களின் வாழ்க்கை வரலாறுகளைப் பத்திரிகையில் எழுதிப் பிரபலமானவர். ஆறு வயதிலிருந்தே அமெச்சூர் நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்த திரு ஓய். வி. ராவ் 1926-ம் வருஷம் பம்பாயில் 'நீரா' என்ற ஊமைப் படத்தில் கதாநாயகனாகத் தோன்றியதோடு, சதி சுலோசனா என்னும் முதல் கன்னட திரைப்படத்தை டைரக்ட் செய்த பெருமையையும் தேடிக் கொண்டவர். ஆதி காலத்தில்

மேலிருந்து கீழ்: திருக்கடையூர் என். சின்னையா (தவுல்), கே. என். ரத்தினம் (நாடகத் தயாரிப்பாளர்) புளியம்பட்டி சுப்பா ரெட்டியார் (நாடகத் தயாரிப்பாளர்) ரா. வேங்கடாசலம் (நாடகாசிரியர்) எஸ். ஜே. ஆசார்யா. (அமெச்சூர் நடிகர்)

வெற்றிப் படங்களாக ஓடிய சிந்தாமணி, சாவித்திரி படங்கள் இவரது திறமைக்கு இன்றும் சான்ருக விளங்குகின்றன.

அந்தக் காலத்தில் நாடகக் கம்பெனி நடத்தி நல்ல பேர் வாங்குவதென்பது கஷ்டமான காரியம். மதுரை ஜில்லாவில் 1925-ம் வருஷம் புளியமாநகர் ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியை தொடங்கி, இருபத்தைந்து வருஷங்களுக்கு மேல் நடத்திப் பல நல்ல நடிகர்களைத் தயாரித்துக் கொடுத்தவர் புளியம்பட்டி சுப்பாரெட்டியார். தேவி நாடக சபையை நிறுவிப் பல தமிழ் நாடகங்களை வழங்கியவர் திரு கே. என். ரத்தினம்.

தமிழ்ப் படங்களைப் பார்க்க வேண்டும், அதுவும் ஹாஸ்யப் படங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டும் முறை



என். எஸ். கே. மதுரம்
(ஹாஸ்ய நடிகை)



ஒய். வி. ராவ்
(டைரக்டர்)

ஏ. வி. மெய்யப்பன்
(தயாரிப்பாளர்)

யில் நடித்து ரஸிகர்களின் உள்ளங்களைக் கவர்ந்தவர் ஸ்ரீமதி என். எஸ். கே. மதுரம். திரு கே. சாரங்கபாணியும், 'என் மனைவி', 'வாழ்க்கை' முதலிய ஹாஸ்யப் படங்களில் நடித்து நல்ல பேர் வாங்கியவராயிற்றே.



மண்ணிலிருந்து உயிரினத்தைச் சிருஷ்டிக்கும் பிரமனைப் போல் மண் பானையிலிருந்து கானரசத்தை லயத்தின் மூலம் சிருஷ்டிக்கும் உமையாள்புரம் கோதண்டராமய்யர் அவர்கள், வேதாந்த சிரோமணியும், சாகித்திய சிரோமணியுமான ஹரிகதை ஸ்ரீ எம்பார் விஜயராகவாச்சாரியார் அவர்கள், நாட்டிய கலா கேசரி வழுவூர் ராமையா பிள்ளை அவர்கள், ஏ. வி. எம். என்ற மூன்றெழுத்தை வெள்ளித் திரையில் பொன்னால் (14 காரட் அல்ல) பொறித்துக் கொண்ட ஏ. வி. மெய்யப்பன் அவர்கள், தமிழ் நாட்டுத் திரைப்பட உலகின் தனிப்பெரும் தாரகையான சிவாஜி கணேசன் அவர்கள், நாடகக் கதாசிரியர் ரா. வேங்கடாசலம் அவர்கள், ஒலிப் பதிவு நிபுணர் ஜிதன் பானர்ஜி, ஒலிப்பதிவு நிபுணர் வி. எஸ். ராகவன் அவர்கள் ஆகியோர் பல ஆண்டுகளாகத் தத்தம் துறையில் கியாதியுடன் விளங்குபவர்கள்; நிச்சயமாகப் பரிசு பெற வேண்டியவர்கள்.

இன்று தாங்கள் இடம் பெற்றுள்ள சினிமாத் துறையிலேயே பரிசு பெறத் தகுதி வாய்ந்த எம். ஆர். ராதாவும், எம். என். ராஜமும் பூர்வாசிரம நாடக நடிகர்கள் என்ற முறையில் பரிசுகளைப் பெறுகிறார்கள்.

பரிசு பெறும் எல்லாக் கலைஞர்களுக்கும் நம் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்; பரிசு வழங்கும் தமிழ் நாட்டுச் சங்கீத நாடக சங்கத்துக்கும் நம் வாழ்த்துக்கள்.











மேலிருந்து கீழ்: சிவாஜி கணேசன் (நடிகர்). கே. சாரங்கபாணி (நடிகர்). எஸ். டி. எஸ். யோகியார் (நாடகக் கதை ஆசிரியர்). ஜிதன் பானர்ஜி (ஒலிப்பதிவு நிபுணர்). வி. எஸ். ராகவன் (ஒலிப்பதிவு நிபுணர்).

# தைலஸின்

வயிற்றிலே தங்கள் குட்டிகளைச் சுமக்கப் பையை உடைய பிராணி எது என்று கேட்டால் நீங்கள் உடனே கங்காரு என்று பதில் சொல்வீர்கள். ஆனால் கங்காருவைத் தவிர இன்னும் பல பிராணிகளுக்கும் இம்மாதிரியான பை இருக்கிறது. இம்மாதிரியான பையையுடைய பிராணிகள் ஆஸ்திரேலியாவில் தான் வாழுகின்றன. நீங்கள் இங்கே காண்பது தைலஸின். ஆஸ்திரேலியாவிலேயே மாமிசம் சாப்பிடும் மிகப் பெரிய மார்ஸுபியல் — அதாவது பையையுடைய பிராணி இதுதான். ஆஸ்திரேலியாவை அடுத்துள்ள டாஸ்மேனியா என்ற தீவின் காடுகளில் இது வசிக்கிறது. இதை டாஸ்மேனியன் ஓநாய், டாஸ்மேனியன் புலி என்றும் கூறுவார்கள். ஓநாயைப் போன்ற முகமும் உடல் அமைப்பும் இருப்பதாலும், புலியைப் போல முதுகிலும் பின்புறத்திலும், தொடையிலும் வரிக்கோடுகள் இருப்பதாலும் இவைகளை இப்படி அழைக்கிறார்கள். டாஸ்மேனியாத் தீவில் மக்கள் குடியேற ஆரம்பித்த காலந் தொட்டு இதை அதிகமாகக் கொன்று வருவதால் இதன் எண்ணிக்கை மிகவும் குறைந்திருக்கிறது. வல்லபி என்ற சிறிய இனக் கங்காரு, பையையுடைய மற்றச் சிறிய பிராணிகள், எலி, பறவை, பல்லி இவைதான் இதன் ஆகாரம். தைலஸின் ஆடு, கோழிகளையும் விரும்பிச் சாப்பிடும்.



வேகமாக ஓடக் கூடிய பிராணியல்ல இது. ஆனால் தன் இரையைத் தூரத்திச் செல்லும் போது களைப் படைவதில்லை. அவைகளை அடைந்ததும் குபீரென்று பாய்ந்து கொன்று விடும். நாயின் பற்களைப் போன்ற கூரான நீண்ட முன் பற்களும் உறுதியான கடைவாய்ப் பற்களும் எலும்புகளைப் பொடித்துத் தின்னப் பயன்படும்படி இருக்கின்றன. சில சமயங்களில் கங்காருவைப் போலவே பின்னங் கால்களை ஊன்றி முன்னங் கால்களைத் தூக்கித் தாவவும் செய்யும் இந்தத் தைலஸின். இது மிகுந்த சங்கோசம் உள்ள பிராணி. தான் தாக்கப்பட்டாலொழிய இது மனிதர்களைத் தாக்குவதில்லை. இதற்கு இரண்டிலிருந்து நான்கு குட்டிகள் வரை பிறக்கின்றன. குட்டிகள் தாயின் வயிற்றிலுள்ள பைக்குள் பாதுகாப்பாக இருந்து வளருகின்றன.



## உங்கள் ஆல்பத்துக்கு

நீங்கள் படிக்கும் இந்தப் பத்திரிகை அச்சாகும் காகிதமான 'நியூஸ் பிரிண்ட்' இருக்கிறதே இதை உலகிலே மிக அதிகமாக உற்பத்தி செய்யும் நாடுகளில் ஒன்று ஸ்காண்டிநேவியா. நார்வே ஸ்வீடன் என்ற இரண்டு நாடுகள் சேர்ந்தது இது. ஐரோப்பாவின் மேல் கோடியில் துருவத்துக்கு அருகே உள்ள நாடுகள் இவை. அவைகளில் ஒன்றான நார்வே நாட்டைச் சேர்ந்த பெண், தேசிய உடையில் உட்கார்ந்திருப்பதையே மேலே காண்கிறீர்கள்.

## குதிரைச் சவாரி

உங்களை எல்லாம் விளையாட்டு மைதானத்துக்கு அழைத்துச் சென்று வெகு நாட்களாகி விட்டன, இல்லையா? உலகக் குழந்தைகளின் விளையாட்டு வரிசையில் இந்த வாரம் நம் நண்பனைப்போல நடித்து வந்த அண்டை நாடான சீன நாட்டு விளையாட்டைப் பற்றித் தெரிந்து கொள்ளலாமா? இரண்டு கட்சிகளாகப் பிரிந்து கொண்டும் இதை விளையாடலாம். ஒருவன் (A) நிமிர்ந்து நிற்க அவன் பின்னால் மற்றவன் (B) குனிந்தபடி அவன் கையைப் பற்றிக் கொண்டு நிற்க வேண்டும். இவ்விருவரும் குதிரை. B யின் முதுகில் மூன்றாமவன் (C) ஏறி உட்கார்ந்து கொள்ளுவான். இவன் தான் குதிரை சவாரி செய்யும் அதிர்ஷ்டம் செய்தவன். நான்காவது நபர் Aயின் முன்னால் நின்று கொண்டு குதிரை மீது இருப்பவனோடு உரையாட வேண்டும் (D). குதிரைமீதிருப்பவனும் குதிரையின் முன்னால் உள்ளவனும் தங்கள் தங்கள் வலக்கரத்தை உயர்த்திப் பத்துக்குள் ஓர் எண்ணைச் சொல்லுவார்கள். உயர்த்திய கரத்தின் விரல்களில் சிலவற்றை விரித்தபடி எண்ணிக்கையைக் காட்டுவார்கள். இரண்டு கை விரல்களின் கூட்டுத் தொகை யார் சொல்லிய எண்ணுக்குச் சரியாக வருகிறதோ அவர்கள் வெற்றி பெற்றவர்கள். உதாரணமாக D எட்டு என்றும், C ஆறு என்றும் கூறுகிறார்கள்.




D தன் கையின் விரல்களில் ஐந்தையும் C தன் விரல்களில் மூன்றையும் காட்டுகிறார்கள். இரண்டின் கூட்டுத் தொகை எட்டு. எட்டு என்ற எண்ணைச் சொன்னது D. ஆகவே வெற்றி Dக்கு. இரண்டு பேரும் ஒரே எண்ணைக் கூறி அதன் கூட்டுத் தொகை விரல்களின் எண்ணிக்கைக்குச் சரியாக வருமானால் யாருக்கும் வெற்றி தோல்வியில்லை. தொடர்ந்து ஆட வேண்டும். இரண்டு பேரும் கூறிய எண்கள் விரல்களின் கூட்டுத் தொகைக்குச் சரியாக வராவிடினும் தொடர்ந்து அடுத்த எண்ணைக் குறிப்பிட்டு இதேபோல ஆடவேண்டும். வெற்றி பெற்றவர் குதிரையில் Aயாகவும், தோல்வி யடைந்தவர் குனிந்த நிலையில் Bயாகவும் மாறி நிற்க வேண்டும். — விளையாட்டில் கலந்து கொண்டுள்ள எல்லாருக்கும் குதிரை சவாரி கிடைக்கும் வகையில் இதை ஆடினால் சுவாரசியமாக இருக்கும்.



## சர்க்கரைத் தீவு

சர்க்கரைத் தீவுகளைப் பற்றிக் கேட்டிருக்கிறீர்களா? இல்லை யல்லவா? அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைக் கரீபியன் கடலிலிருந்து பிரிக்கும் தீவுக் கூட்டத்தைத்தான் 'ஷுகர் ஐலண்ட்ஸ்' கரும்பு அல்லது சர்க்கரைத் தீவுகள் என்று குறிப்பிடுகிறார்கள். மேற்கிந்தியத் தீவுகள் (வெஸ்ட் இண்டீஸ்) என்று படித்திருப்பீர்களே அவைகளுக்குத்தான் இப்படி ஒரு பெயர். சிறியதும் பெரியதுமாக ஐந்திலிருந்து 45,000 சதுர மைல் வரை பரப்பு கொண்ட சுமார் 40 தீவுகளைக் கொண்டது இந்த வெஸ்ட் இண்டீஸ். கியூபா, ஹைடி, டொமினிகன் குடியரசு, ஜமைகா, போர்டோரிகோ ஆகிய தீவுகள் பெரியவை. இவைகளின் முக்கிய விளைபொருள் கரும்பு.

கரும்பைத் தவிர தேங்காய், வாழைப் பழம், காப்பி, கோகோ ஆகியவைகளும் இங்கு அதிகம். வட தென் அமெரிக்காக்களுக்கு இடையில் இருந்தாலும் இதை மேற்கு இந்தியத் தீவுகள் என்று அழைப்பானேன்? இந்தியாவுக்குக் கடல் மார்க்கம் காணப் புறப்பட்ட கொலம்பஸ் 1492ல் இவைகளைக் கண்டு பிடித்தார். அப்போது, தான் கண்டு பிடித்தது இந்தியா என்றே அவர் நம்பி இருந்ததால் இவைகளை மேற்கு இந்தியத் தீவுகள் என்று அழைத்தார். அந்தப் பெயரே நிலைத்து விட்டது.

புல்லைப்போல் அடர்ந்து வளர்ந்து மண்டிக் கிடக்கும் கரும்பங் கழிகளை வெட்டுவதற்குப் பிரத்தியேகமான நீண்ட கத்திகளைப் பயன் படுத்துகிறார்கள். நன்றாகச் செழித்து வளரும் கரும்பங் கழிகளை வெட்டிக் கட்டி வண்டிகளில் ஏற்றிச் சர்க்கரைத் தொழிற்சாலைக்கு அனுப்பும் காட்சியையே இங்கு காண்கிறீர்கள்.






உடல் வளைவுகளுக்கேற்றப்போல் அமுக்கப்பட்ட ஆசனமும், முதுகுச்சாய்மானமும் மகிழ்ச்சியூட்டும் வசதியை அளிக்கக்கூடிய உருதியான எஃகு குழாயினுல் செய்யப்பட்ட உலோகப் பாகங்களெல்லாம் வாட்டி யெடுக்கும் முறையில் எனமல் பூசப்பட்டுத் துருப்பிடிக்காமல் செய்யப்பட்ட நாற்காலியை வாங்குங்கள்.

சிறந்த தரத்தில் அடுக்கடுக்காக

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பரைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் வாட்டி எனமல் பூசப்பட்டது.
- ஆசனம் மற்றும் முதுகுச் சாய்மானத்தின் அமைப்பு அதிக வசதியை அளிக்கிறது.
- ஈரத் துணியைக்கொண்டே துடைத்து எளிதில் சுத்தமாக வைத்துக்கொள்ளலாம்.
- மடக்குவதற்கு விசேஷ அமைப்பு.
- வழுக்கிவிடாத, தரையைக் கீராத ரப்பர் அடிகள் கொண்டது.
- பல்வேறு வர்ணங்களில் கிடைக்கக் கூடியது.




ஆயிரம் காலம்
ஆள்வதற்கு



தயாரிப்போர்:
க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.
பி-35 இந்தியன் எக்ஸ்சேஞ்ச் ப்ளேஸ், கல்கத்தா-1

# பத்தினிக் கோட்டம்

**ஜெகசிற்பியன்**

## அத்தியாயம் ஐம்பத்தொன்று

## 'இன்றே செய்!'

மதுவுண்ட பேயெனப் பாய்ந்து வரும் அந்தப் புரவியைப் பார்த்துக் கொண்டே மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்து நின்றாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி.

'என்னைப் பார்க்க வேண்டும் என்பதற்காக அவர்தான் எத்தனை ஆவேச ஆவலோடு குதிரையைச் செலுத்தி வருகிறார்! அவரது நெஞ்சத்தில் குமுறிப் பொங்கும் காதல், தீப்பிழம்பாக வெளிப்பட்டுக் காற்றோடு காற்றாகப் பற்றியெரிந்து வருவதுபோல் அல்லவா அந்தக் குதிரை கடுகி வந்து கொண்டிருக்கிறது!'

பெருமையால் மனம் பூரித்துக் குலுங்கினாள் அவள்.

'இன்னும் சில விநாடிகளில் அந்தப் புரவி இங்கே திமிற விட்டுக் கொண்டு வந்து நின்றுவிடும். தென்றல் தேரிலிருந்து இறங்கும் மாரவேள்போல் அவர் துள்ளிக் குதித்துக் கீழே இறங்குவார். அப்போது நான் என்ன செய்வது? அஞ்சுகமெனப் பறந்தோடி அவரது தோளில் தொற்றிக்கொண்டு ஊஞ்சலாடலாமா? அல்லது வியர்வை வழியும் அவருடைய விரிந்த மார்பிலே பட்டுத் துகில் போல் ஒட்டிக் கொள்ளலாமா?'

அவள் முகம் நாணத்தால் கன்றிச் சிவந்தது. தன் பொன்னவிர் மேனியைக் கூனிக் குறுக்கிக் கொண்டு ஓரடி பின்னால் நகர்ந்தாள்.

'வேண்டாம். அப்படியெல்லாம் அசட்டுத்தனமாக நடந்து கொள்ளக்கூடாது. அவரே அவருடைய அன்பாவேசத்தால் என்ன செய்கிறாரோ அதற்கெல்லாம் என்னை உட்படுத்திவிட்டு ஒன்றும்



தெரியாதவள் மாதிரி இருந்துவிட வேண்டும். அத்துடன் அவர் மேல் கொஞ்சம் கோபமாக இருப்பது போலக்கூடக் காட்டிக் கொள்ள வேண்டும். பின்னே என்னவாம்? அந்தஆபத்துதவி இளங்காரியிடம் சேதிசொல்லியனுப்பிஎவ்வளவுநேரமாகி விட்டது! அவர் இப்போதுதானே சாவதானமாகப் புறப்பட்டு வருகிறார்? இவ்வளவு வேகமாகத்தானா தம் குதிரையை அவரால் செலுத்த முடியும்? இன்னும் விரைவாகச் செலுத்தி வர இயலாதா? இப்படித் தாமதமாக வரும் அவருக்கு என்ன தண்டனை விதிக்கலாம்? எங்காவது போய்ச் சிறுபொழுது ஒளிந்து கொண்டு விடலாமா? சற்று நேரமாவது என்னை அவர் தேடியலைந்து தவிக்கும்படி விட்டு விடலாமா?'

சட்டென்று தன் பூவுடலை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு நெளிந்தாள் அவள்.

'ஐயோ! எனக்குத்தான் எத்தனை பெரிய கல் நெஞ்சம்! என்னைக் காணாமல் பல தினங்களாக ஊண் உறக்கமின்றி உருகிக் கரைந்து கொண்டிருக்கும் அவருக்கு விளையாட்டாகக் கூட அப்படியொரு தண்டனை விதிக்க நான் நினைக்கலாமோ? அவ்வாறு நினைத்த என் நெஞ்சுக்குத்தான் தண்டனை அளிக்க வேண்டும்! என்ன தண்டனை அளிப்பது? அவர் வந்ததும் அவரையும் முந்திக் கொண்டு போய் அவருடைய கன்னத்தில் நானே ஓர் இதழ் முத்திரையைப் பதித்து விடலாமா? ஆமாம்; அதுதான் என்னுடைய நெஞ்சுக்குச் சரியான தண்டனை!'

அவள் 'களுக்'கென்று சிரித்தாள். தன்னை மீறிய படபடப்போடு சாலையின் ஓரத்தை விட்டுச் சற்றே முன்னால் தள்ளி வந்தாள்.

விசாலமான அந்தச் செம்மண் சாலை அதிர்ந்து கிடுகிடுத்தது. பாய் விரித்தாற்போல் உதிர்ந்து கிடந்த இலைச் சருகுகள் பட்டாம் பூச்சிக் கூட்டமெனப் பறந்து சிதறின. பறை முழக்கம் போன்ற குளம்போசையுடன் புழுதிக் கூடாரமிட்டுப் புயலெனப் பாய்ந்து வந்த புரவி, இதோ அவளை நெருங்கி விட்டது.

நெஞ்சத்துக் காதலையெல்லாம் வழித்துத் தன் நீள் விழிகளிலே தேக்கிக் கொண்டு நிமிர்ந்த இளங்கோப்பிச்சி, அந்த அழகிய குதிரையையும், அதை வீறார்ந்த கோலத்தில் செலுத்தி வரும் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனையும் மையலுடன் ஏறிட்டு நோக்கினாள்.

என்ன ஆச்சரியம்! அம்பெனப் பாய்ந்து வந்த புரவி அவளைப் புழுதியால் மறைத்து விட்டு அங்கே ஒரு கணமும் நிற்காமல் அவ்விடத்தைக் கடந்து ஓடியது!

கண்ணிலே மின்னலடித்தாற் போல் கதிகலங்கி விட்டாள் இளங்கோப்பிச்சி. அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. வெலவெலத்து நின்ற அவள் தன் விழி வளையக் குழியிலே செருமிய மண் புழுதியை நிமிண்டித் துடைத்து விட்டுக் கொண்டு சடாரெனத் திரும்பினாள்.

அதோ, வேங்கைப் பாய்ச்சலிட்டு விரைந்தோடிக் கொண்டிருக்கிறது அந்தக் குதிரை! அதைச் செலுத்திச் செல்பவன் கோவிந்தவர்மன்தானே? அதில் சந்தேகமில்லை! அப்படியானால் அவன் ஏன் அவளைத் திரும்பியும் பார்க்கவில்லை? சாலையின் இடதுபுறம் அவள் நின்றிருக்க, அவன் வலது பக்கமாகவே தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு போகிறானே? அளவுக்கு மீறிய வேகத்தில் புரவியைச் செலுத்தி வந்ததால் அந்த இடத்திலே சட்டென்று அதை நிறுத்திப் பிடித்து இறங்க அவனால் இயலாமற் போய் விட்டதோ? அவளைப் போலவே அந்தப் புரவியும் நிதானம் தவறி விட்டதோ?

இரண்டு பட்டிகா தூரம் சென்று விட்ட குதிரை சடாரென்று தன் வேகத்தைக் குறைத்துப் பெருங் குரலெடுத்துக் கனைத்துக் கொண்டே திமிறித் துள்ளி நின்றது. அவன் திரும்பிப் பார்த்தான்.

பொறி கலங்கி நின்ற இளங்கோப்பிச்சி புத்துயிர் பெற்று நிமிர்ந்தாள். முன்னை விடப் பன்மடங்கு உற்சாக மகிழ்ச்சியுடன் அவனை நோக்கிப் பாய்ந்து செல்லத் தன் பூம்பாதங்களைப் பெயர்த்



தான். அதே சமயம், முரண்டிக் கொண்டு நின்ற குதிரையின் பிடரியில் ஓங்கி ஒரு குத்து விட்டான் கோவிந்த வர்மன். அடுத்த கணம், நொப்பும் நுரையுமாகக் கக்கிக் கனைத்துக் கொண்டே சுழன்று திரும்பிய அந்தப் புரவி முன்போலவே வெறிப் பாய்ச்ச விட்டு விரைந்தோடி மறைந்தே விட்டது!

உலகம் ஒளி மயமாகத்தான் இருந்தது. ஆனால் இளங்கோப்பிச்சியின் கண்ணெதிரே மட்டும் அது இருண்டு சுழல ஆரம்பித்தது. அப்புறம் அதையும் அவளால் உணர முடியாமல் போய்விட்டது.

அப்படிக் சுழன்று சென்ற உணர்வு திரும்பி வந்து சேர்ந்து அவள் கண் திறந்து பார்த்தபோது உலகம் உண்



வலி!
வலி!
வலி!

வலி!
வலி!
வலி!

மூட்டு வலி, கீல் வாதம், கடின உழைப்பு, இதர வலிகள்...

வலி
எதுவாயினும்
நிவாரணம்
பெற




# ஸ்லோன்ஸ் பாம்

"எந்த வலிக்கும் ஏற்ற மருந்து"

ஸ்லோன்ஸ் லினிமென்ட்டையும் உபயோகிக்கலாம். சிறிது தடவினால் போதும். இதமான அதன் வெப்பம் உடனடி நிவாரணம் தருவதை உணரலாம்.



வார்னர்-லாம்பர்ட் பார்மசூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது.)

மையாகவே இருண்டு கொண்டிருந்தது. கட்டிலின் தலைமாட்டில் கண்ணீர் சோர நின்றிருந்த மூதாட்டி அருந்தமதி அவசரமாகப் போய் அந்த அறையில் விளக்கேற்றி விட்டு, சிற்றுணவு தயாரித்துக் கொண்டு வர அடுத்த அறைக்கு வேகமாக விரைந்தாள்.

வதங்கிய மாதவிக் கொடி போல் கட்டிலில் படுத்துக் கிடந்த இளங்கோப்பிச்சி மெல்ல எழுந்து உட்கார்ந்து சுற்றுமுற்றும் பார்த்தாள். அன்றையப் பகல் பொழுது நடந்த சம்பவங்கள் அனைத்தும் ஒன்றன்பின் ஒன்றாக அவளுடைய நினைவில் வந்து நிறையலாயின. ''அவர் போய் விட்டாரா? என்னைப் பார்க்காமலே அவர் போய் விட்டாரா?'' என்று விம்மலும் பொருமலுமாகக் கதறிக் கொண்டே எழுந்த அவள், நிற்கத் தெரியாத பச்சிளங் குழந்தைபோல் தயங்கித் தள்ளாடிக் கட்டிலில் சாய்ந்தாள். அவளுக்கு மீண்டும் மயக்கம் வருவது போல் இருந்தது. ஆயினும் தன்னைச் சமாளித்துக்கொண்டு கட்டிலின் தலைப்புச் சட்டத்தில் ஒருக்களித்து முடங்கியவாறு எதிரேயிருந்த சாளரத்தின் வழியே தன் பார்வையைச் செலுத்தினாள்.

ஒளித் திரை சுருண்டு இருள் திரை வேகமாக விரிந்து வரும் அந்த நேரத்தில், வாசல் வெளியோரம் இருந்த பவழமல்லி மரமும் அதற்கு அப்பால் இருந்த நெடுஞ்சாலையும் செவ்வானைச் சாற்றைக் கொண்டு தீட்டிய சித்திரங்கள் போல் மங்கலாகத் தோற்றம் அளித்தன. அவற்றிடையே ஏதோ ஒரு கரிய நிழல் அங்குமிங்குமாக அசைவது போலவும், பிறகு அது மறைவது போலவும் தெரிந்தது.

இளங்கோப்பிச்சி அதைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தாள். ஆனால் அந்தக் காட்சி அவளுடைய கட்புலனோடு மட்டுமே நின்று விட்டிருந்தது. கண்ணின் தொடர்பிலிருந்து அறுந்து நின்ற மனம் குழப்பமான பல கேள்விகளை எழுப்பி அவற்றிலேயே சிக்கித் திணறிக் கொண்டிருந்தது.

'அவர் ஏன் என்னைப் பார்க்காமல் போய் விட்டார்? என் மீது அவருக்கு என்ன கோபம்? அந்த அளவு அவர் கோபப்படும்படி நான் என்ன பிழை செய்து விட்டேன்?'

அழுகை அவள் தொண்டையை அடைத்தது.

'ஆந்திர இளவரசி உத்தமசீலியின் அழைப்புக்கிணங்கிப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக்கு நான் போனதையும், அவரைப் பற்றிய உண்மைகளை அவளிடம் வெளியிட்டு விட்டதையும் அறிந்து என்மீது அவர் சீற்றமும் அவநம்பிக்கையும் கொண்டு விட்டாரா ? எம லிங்கரர்களைப் போன்ற சளுக்கிய வீரர்கள் நேருக்கு நேர் எதிர்த்து அழைக்கும்போது அதை என்னால் எப்படித் தட்டிக் கழிக்க முடியும்? அல்லது அவர்களை ஏமாற்றிவிட்டுத் தப்பிச் செல்லத்தான் முடியுமா? அந்தப் பட்டோலை சம்பந்தமான எல்லா விவரங்களையும் அவள் முன்கூட்டியே அறிந்து என் முகத்துக்கு நேரேயே சொல்லிக் கேட்கும்போது அவற்றை என்னால் எப்படி மறுக்க இயலும்? மறுத்தால் பயங்கர விளைவு நேரிடும் என்று எச்சரித்தாளே! இதெல்லாம் அவருடைய அறிவுக்கு எட்டாமலா போய் விட்டிருக்கும்?'

இளங்கோப்பிச்சி வேகமாகத் தலையை ஆட்டிக் கொண்டாள்.

'இல்லை; அப்படியெல்லாம் அவர் என்னைப் பற்றித் தவறாக ஏதும் நினைக்கவே மாட்டார். அன்றொரு நாள் அந்தப் பட்டோலையை அதன் விவரம் அறியாமல் ஆந்திர இளவரசியிடம் கொடுத்து விட்டதற்காகக் கூட என்மீது வருத்தமோ சினமோ கொள்ளாத அவர், இந்த விஷயத்துக்காகவா இத்தனை கோபமும் ஆத்திரமும் கொண்டு விடுவார் ? இன்னும் சொல்லப் போனால், எதிரிகளின் இருப்பிடத்துக்குப் போய் எவ்வித ஆபத்துமின்றி நான் திரும்பி வந்து விட்டதற்காக எல்லையற்ற மகிழ்ச்சியே அடைந்திருப்பார்! பின் ஏன் அவர் என்னைப் பார்க்காமலேயே போய்விட்டார்?'

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள் போல் உடம்பைச் சிலிர்த்து விட்டு நிமிர்ந்தாள் அவள்.

'மண்டபப்பட்டுக் குகைக் கோயிலிலே என் தந்தையாரை இவர் சந்தித்தபோது அவருடைய போக்கில் ஏதோ மாறுதல் கண்டதாகச் சொன்னாரே! அந்தக் கசப்பான கருத்தை மேலும் உறுதிப்படுத்திக் கொள்ளக் கூடிய புதிய நிகழ்ச்சி ஏதேனும் நிகழ்ந்து விட்டதோ? அதனால்தான் என் தந்தையார் என்னை உடனே பழையாறைக்கு அழைத்து வந்து சேர்க்கும்படி சம்புவராயனை அனுப்பி வைத்தாரோ? சில தினங்களுக்கு முன் பழையாறைக்குப் போன பெரும்பிடுகு முத்தரையர் மிகுந்த மனத்தாங்கலோடு திரும்பி வந்திருப்பதாகவும், அதற்கான காரணம் தனக்குத் தெரியாதென்றும் இளங்காரிக்குடையான் இன்று காலை இங்கு வந்தபோது கூறினானே? முத்தரையர் அப்படி மனத்தாங்கலுடன் வர அங்கே என்ன நடந்திருக்கும்? உண்மையில் என் தந்தையாரின் போக்கு மாறித்தான் விட்டதா? அதை அறிந்ததால் ஏற்பட்ட கோபத்தைத்தான் இவர் என் மீது காட்டி விட்டுப் போனாரோ...?'

எதிரே யிருந்த சாளரக் கதவை யாரோ படீரென்று அடித்துச் சாத்தித் திறக்கும் ஒலி கேட்டுத் திடுக்குற்று எழுந்தாள் இளங்கோப்பிச்சி. அதே சமயம், அந்தச் சாளரத்து வழியே யிருந்து அவளை நோக்கி விர்ரெனப் பறந்து வந்து விழுந்தது ஓர் ஓலைச் சுருள். அதைக் குனிந்து எடுத்துக் கொண்டு ஓடிப் போய் வெளியே எட்டிப் பார்த்தாள் அவள். இருளோடு இருளாக ஒரு கரிய உருவம் சாலையில் இறங்கி ஓடுவது தெரிந்தது.

பயப் பிராந்தியால் நடு நடுங்கிய அவள் பரபரப்புடன் விளக்கடியில் வந்து நின்று அந்தச் சிறிய ஓலைச் சுருளை அவசரமாகப் பிரித்துப் படித்தாள்:

''சோழ இளவரசி இளங்கோப் பிச்சிக்கு இதன் மூலம் தெரியப்படுத்துவது யாதெனில், — பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரைக் காதலிக்கும் நீ, வெகு விரைவிலே சளுக்கிய இளவரசனான விநயாதித்தனுக்கு மனைவியாகப் போகிறாய்; அதற்கு உன் தந்தையார் ஒப்புதலும் தந்து விட்டார். இது முதல் சேதி. அடுத்து சளுக்கிய விக்கிரமாதித்தர் இன்னும் சில தினங்களில் உன் உறவினர் நாடான பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கத் திட்டமிட்டிருக்கிறார். இது இரண்டாவது சேதி. இவ்விரண்டு சேதிகளையும் அறிந்தபின் நீ என்ன செய்யப் போகிறாய்? ஏதாவது செய்ய நினைத்தால் அதை இன்றே செய்.''

யாரால் எழுதப் பெற்றதென்ற விவரமோ, யார் மூலமாக அனுப்பப்பட்டதென்ற தகவலோ இன்றி மொட்டையாக முடிந்த அவ்வோலையைப் படித்து மூர்ச்சித் திணறி விட்டாள் இளங்கோப் பிச்சி. பித்துப் பிடித்தவள் போல் அங்குமிங்குமாக ஓடி அலை மோதினாள். பிறகு 'ஓ'வென அலறிப் புலம்பிக் கொண்டே வந்து கட்டிலில் குப்புறச் சாய்ந்தாள்.

அவளுக்கு எல்லாம் புரிந்து விட்டது. சம்புவராயன் அவளைப் பழையாறைக்கு அழைத்துப் போக வந்த காரணமும், கோவிந்தவர்மன் அவளைத் திரும்பியும் பார்க்காமல் உதாசீனப்படுத்தி விட்டுச் சென்ற காரணமும் இப்போது நன்றாகப் புரிந்து விட்டன. ஆனால் இந்த ஓலை யாரால் எழுதப் பெற்று, யார் மூலமாக வந்து சேர்ந்தது என்ற விவரம் மட்டும் அவளுக்கு விளங்கவே இல்லை.

'ஒருகால் பல்லவ இளவரசரே இவ்வோலையை எழுதிச் சாளரத்து வழியே எறிந்து விட்டுப் போய் இருப்பாரோ?'

அப்படித்தான் இருக்கும் என்று அவள் எண்ணினாள். ஆயினும் அதை நிச்சயப்படுத்திக் கொள்ள அவளால் இயலவில்லை. மேலும், அந்த ஓலையில் தெரிவித்துள்ள இரண்டு சேதிகளும் உண்மையானவைதாமா என்ற சந்தேகம் வேறு அவள் மனத்தை உருட்டிப் புரட்டி எடுத்தது. கோவிந்தவர்மன் அவளைப் பார்த்தும் பாராமல் போனதைக் கொண்டு, அவை மெய்யான சேதிகளாகவே இருக்குமென ஒருவாறு தீர்மானித்துக் கொண்டாள்.

அன்றிரவெல்லாம் அவள் கண்கள் வர்ஷ ருதுவாகி விட்டிருக்க, நெஞ்சமோ கிரீஷ்ம பருவத்தை எய்தி விட்டிருந்தது.

தன்னாலான வரையில் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்ற முயன்று தோல்வியுற்ற அருந்தமதி, துயரச் சோர்வுடன் தூங்கிப் போனாள்; விடியற்சாம நேரத்தில் கண் விழித்து எழுந்த போதுதான் அங்கே சோழ இளவரசி இளங்கோப் பிச்சி இல்லை என்ற விஷயம் தெரிந்தது!

## அத்தியாயம் ஐம்பத்திரண்டு

# சதி அரங்கம்

ஒரு பகலும் ஓர் இரவும் ஓடிக் கழிந்த பின்னும் அவனால் அந்தக் இன்பக் கனவிலிருந்து மீளவே முடியவில்லை. அதை நினைக்க நினைக்க அவன் நெஞ்சம் இனித்தது. அந்த நினைவே நெஞ்சமாகி அதன் ஒவ்வொரு பகுதியும் தேனைப் பிலிற்றியது.

நேற்றைய முற்பகல் அந்த திருவையத்துக் குளக் கரையிலே நிகழ்ந்த காவிய மயமான சம்பவங்களை எண்ணித்தான் அப்படிக் களிபேருவகை அடைந்து கொண்டிருந்தான் ஆந்திர இளவரசி உத்தமசீலி. அந்த நிகழ்ச்சிகளின் ஒவ்வோர் அசைவும் ஒரு கவிதைச் சித்திரமாக அவன் உள்ளத்தில் பதிந்திருந்தது. அங்கு உரையாடிய ஒவ்வொரு சொல்லும் ஒரு வேத மந்திரமாக அவன் செவியில் ஒலித்துக் கொண்டிருந்தது. அவ்விடத்திலே கழிந்த ஒவ்வொரு விநாடியும் ஒரு கிருத யுக வரலாறாக அவன் இதயத்தில் வரையப் பெற்றிருந்தது. இனி வரப் போகும் தன் வாழ்நாட்களை, நேற்றைய அந்தப் பாதிப் பொழுதை எண்ணி எண்ணியே கடத்தி விடலாம்போல் அவனுக்குத் தோன்றியது.

# சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெய் அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்



# காஸ் ஜனதா

மண்ணெண்ணெய் அடுப்பு

சுவையான சமையல்



சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள் :

**தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12





KALPANA

# KALINGA POLES

STEP DRAWN STEEL TUBULAR POLES FOR POWER TRANSMISSION, STREET LIGHTING, ETC.

**KALINGA TUBES LTD.** 33, Chittaranjan Avenue, Calcutta-12.
Works—Choudwar, (Orissa)

ஆத்தி மரக் கிளையிலே அவள் உட்கார்ந்திருக்க, அவளது அழகிய பிம்பம் நீர்ப் பரப்பிலே மிதந்து கிடக்க, அந்த நீரோவியத்தையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மகிழ்ச்சிக் கிறக்கமிட்டு, அதன் முகவிலாசத்தில் நெளிந்த அதரங்களுக்கு நேரே தன் கரங்களை நீட்டி அவற்றை ஸ்பரிசிப்பது போல் அங்குள்ள நீரை அள்ளிப் பருக முயன்றானே — அந்த ஒரு நிகழ்ச்சியை மட்டும் அவள் இரண்டொரு முறைதான் நினைத்தாள்; அதற்குமேல் அவளால் நினைக்க முடியவில்லை. ஏனென்றால், அவளே அந்த நினைப்பாகிப் போனாள்! கண்ணாடியில் கண்ணாடியைக் காண முடியுமோ?

அந்த ஒரு நிகழ்ச்சிக்கு அவள் அத்தனை முக்கியத்துவம் கொடுத்ததற்குக் காரணம், அதை நெஞ்சில் நிறுத்தி நினைப்பதால் ஏற்படும் சொர்க்க சுகானந்த உணர்ச்சிப் பேரின்பத்துக்காக மட்டுமல்ல; அந்த நிகழ்ச்சியைக் கொண்டே அவனுடைய மனத்தை அவளால் தெள்ளத் தெளிவாக உணர்ந்தறிய முடிந்தது என்பதால்தான்! ஒரு மனிதனின் உண்மையான உள்ளம் அவனது தனிமைச் செயலிலிருந்து தானே வெளிப்படுகிறது?

'மற்றவர்களின் மனங்களை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது; ஆனால் என் மனத்தைப் பிறருக்குப் புரிய வைக்கமட்டும் எனக்குத் தெரியவில்லை.'– இப்படிச் சொல்லியே அவனுடைய மனத்தை அவளுக்கு என்ன அழகாகப் புரிய வைத்து விட்டான்!

'இலவந்திகைப் பள்ளியிலிருந்து வெளியே வரும்போது என் இதயம் ஒரு பொற் சிறையில் புகுந்து கொண்டது. அது முதல் நான் வெறும் மனிதனாகவே இருக்கிறேன். இனியும் இப்படியே இருப்பேன்.' — பரமேசுவரவர்மன் சொன்ன இந்தச் சொற்களை அவள் பல்லாயிரம் முறை வாய்விட்டு ஒதியிருப்பாள். ஒவ்வொரு முறை சொல்லும் போதும் அவற்றிலிருந்து புதுப் புதுப் பொருளும், புதுப் புதுச் சுவையும் அவளுக்குப் புலனாகிக்கொண்டேதானிருந்தன.

இப்படித் தன் மனத்தைத் திறந்து காட்டிய அவன், இறுதிவரை தன்னை ஓர் ஓவியன் என்றே எண்ணும்படி நடித்துக் கொண்டிருந்தானே, அதை நினைக்கும் போதுதான் அவளுக்குச் சிரிப்புச் சிரிப்பாக வந்தது. இப்போதும் அவள் அதை நினைத்து வாய் விட்டுப் பலமாகச் சிரித்தாள்.

'பாவம், அவர் இன்னாரென்ற இரகசியம் எனக்கு ஏற்கனவே தெரியும் என்பதைத் தெரிவிப்பதற்காகக் கடைசியாய் அவரிடம் நான் சொன்னதைக் கேட்டு எப்படித் திகைத்துத் திணறி விட்டார்! உண்மையில் அவர் அதற்காக அத்தனை திகைப்பும் திணறலும் அடைந்திருக்கத் தேவை இல்லை. ஏனென்றால், அவர் தம்மை ஓர் ஓவியரென்று என்னிடமோ பிறரிடமோ சொல்லிக்கொள்ளவில்லை. நான்தான் அவரை அப்படி எண்ணினேன். என்னை அவர் ஏமாற்றாமலே நான் அவரிடம் ஏமாந்தேன். ஆயினும் என்னுடைய அந்தத் தவறான முடிவை வெளிப்படுத்தினால் அது என்னை அவமதிப்பது போல் ஆகும் என்று எண்ணி அதற்காகவே தம்மை ஓர் ஓவியரெனக் காட்டி நடித்திருக்கிறார். ஒருவர் இன்னொருவரை அவமதிப்பதில் இரண்டு வகை உண்டு; சொந்த சொற்களை அல்லது செயல்களைக் கொண்டு எதிராளியை அவமதிப்பு ஒரு வகை. அவரது தவறுகளை நேர்முகமாக எடுத்துக் காட்டி உணர்த்துவது இன்னொரு வகை. இவை இரண்டுமே பண்பாடற்ற செயல்களாகும். எனவேதான் உயர்ந்த குணமும், சிறந்த பண்பாடும் கொண்ட அவர், எனக்காகத் தம்மை ஓர் ஓவியக் கலைஞராகக் காட்டிக் கொள்ள முயன்றிருக்கிறார்.'

சிரித்துக் கொண்டிருந்த அவள் பயபக்தியுடன் குனிந்து தன் நெஞ்சை இரு கரங்களாலும் போர்த்திக் கொண்டாள். அவள் மனத்திலே மானசீக வடிவாய்க் கொலு வீற்றிருந்த பரமேசுவரவர்மன் இப்போது இன்னும் ஒரு படி மேலே உயர்ந்தான். அவனுடைய எழிலார்ந்த கற்பனை வடிவத்தைத் தன் மனக் கண்ணால் பார்த்து மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்தாள் அவள்.

''இளவரசியாரின் தனிமையில் குறுக்கிடுவதற்காக மன்னிக்க வேண்டும்!''

இலவந்திகைப் பள்ளியைச் சார்ந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்தில் உட்கார்ந்து இனிய நினைவுகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்த உத்தமசீலி சட்டென்று கண் மலர்த்தி நிமிர்ந்தாள். சளுக்கியத் தளபதி வில்வேலி முகமெல்லாம் சிரிப்பாக அவளை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்த அவள் மனம் கூம்பிச் சிறுத்தது. முகத்தில் நிலவிய அமைதியும் பொலிவும் வறண்டு போயின. திகிலுடன் எழுந்து நின்ற அவள், ''வாருங்கள், ஐயா!'' என்று உயிரற்ற குரலில் வரவேற்றாள்.

''எப்போதும் போலவே இன்றும் ஒரு நல்ல சேதியோடு வந்திருக்கிறேன், இளவரசி!'' என்று கலகலப்பாகக் கூறினார் வில்வேலி.

உத்தமசீலி இதைக் கேட்டு உள்ளூறக் கலங்கினாள். 'இந்த மனிதரின் நிகண்

டில் நல்ல சேதி என்பதற்குத் தீய சேதி என்றுதானே பொருள்!' — போலிப் புன்னகையுடன் அவரை மௌனமாகப் பார்த்தாள் அவள்.

"நீண்ட நாட்களாக நாம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒரு மிகப் பெரிய நல்ல சேதி அது!"— வில்வேலி வார்த்தைப் பந்தல் போட ஆரம்பித்தார்.

உத்தமசீலி மேலும் கலவரமடைந்தாள். 'நீண்ட நாட்களாக ஆவலோடு எதிர்பார்த்த மிகப் பெரிய சேதி என்ன? ஒருகால், பல்லவ மன்னர் வரைந்து கொடுத்த ஓவியத்தின் மூலம் சளுக்கிய ஒற்றர்கள் அவரைக் கண்டுபிடித்துக் கொண்டு வந்து இவரிடம் ஒப்படைத்து விட்டிருப்பார்களோ? அதைத்தான் மிகப் பெரிய சேதி என்று கூறுகிறாரோ?' — இப்படி எண்ணியதுமே அவளுக்கு உயிரே போவதுபோல் ஆகி விட்டது. பதற்றத்துடன் ஓரடி முன் வந்த அவள், "சொல்லுங்கள், ஐயா! சீக்கிரம் சொல்லுங்கள்!" என்று குமுறினாள்.

வில்வேலி அவளைப் பார்த்துக் கடகடவெனச் சிரித்தார். பிறகு ஏதோ சிந்தனை செய்பவர்போல் புருவங்களை நெரித்துக் கொண்டார்.

உத்தமசீலிக்கு ஆத்திரம் பொங்கியது. அதை அடக்கிக் கொண்டு மெல்லச் சிரித்தவாறு, "உறையூரிலிருந்து என் பெரிய தந்தையார் என்னைப் பார்க்க வந்து விட்டாரா ஐயா? அதைத்தான் நல்ல சேதி — பெரிய சேதி — என்கிறீர்களா?" என்று, விக்கிரமாதித்தன் பல்லவபுரத்துக்கு வந்த விவரம் தனக்குத் தெரியாத மாதிரி கேட்டாள்.

வில்வேலி தம் கையைச் சொடுக்கிக் கொண்டு நிமிர்ந்தார். "ஆகா! அந்த விஷயத்தை இளவரசியாரிடம் இன்னும் நான் சொல்லவில்லையா? அதையல்லவா முதலில் சொல்லியிருக்க வேண்டும்?.... மன்னியுங்கள், அம்மணி! தங்கள் பெரிய தந்தையார் பல்லவபுரத்துக்கு வந்து இன்றோடு நான்கு நாட்களாகின்றன. ஆனால், அவசர அவசியமான சில அரசியல் அலுவல்களை அவர் கவனிக்க வேண்டியிருந்ததால், தங்களை உடனே வந்து சந்திக்க முடியாமல் ஆகி விட்டது. நானும் இங்கு சில தினங்களாக வராமல் இருந்ததற்கு அதுதான் காரணம். இளவரசியார் இதுபற்றித் தவறாக ஏதும் கருதிவிட வேண்டாம் என்று பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன்."

உத்தமசீலி அவரை இளநகையுடன் ஏறிட்டு நோக்கினாள். 'விக்கிரமாதித்தர் பல்லவபுரத்துக்கு வந்து நான்கு தினங்களாகி விட்டன என்னும் சேதி நாகோதரனின் வாயிலாக நான் ஏற்கனவே அறிந்திருப்பேன் என்று அஞ்சியே வில்வேலி இந்த உண்மையைச் சொல்லி விட்டார்' என்று எண்ணி உள்ளூறச் சிரித்துக் கொண்ட அவள், "அதனால் என்ன ஐயா! அரசரவர்களுக்கு எத்தனையோ அலுவல்கள் இருக்கும். அவற்றையெல்லாம் முடித்துக் கொண்டு சாவதானமாகவே அவர் என்னைச் சந்திக்க வரலாம்" என்றாள் அமைதியான குரலில்.

"நல்லது, அம்மணி! இப்போது நான் சொல்ல வந்த சேதியைச் சொல்கிறேன்: ஆந்திர இளவரசியார் இந்த நாட்டிலே ஆற்ற வந்திருக்கும் பணிக்கு உறுதுணையாயிருந்து உதவி செய்வதற்காக — மாமன்னர் விக்கிரமாதித்தரின் அழைப்பு பேரில் — சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகள் இன்று பல்லவபுரம் வந்து சேர்ந்து விட்டார்!"

அதிர்ச்சியுற்றுத் தலைநிமிர்ந்த உத்தமசீலி, "என்ன! அகளங்க அடிகளா வந்திருக்கிறார்?" என்று வியப்பேறிய குரலில் வினவினாள்.

"ஆம், அம்மணி!"

"அவர் வந்து கொண்டிருக்கிறாரா? அல்லது வந்து விட்டாரா?"

"வந்தே விட்டார்! பல்லவபுரம் அரண்மனையில் இப்போது அவர் தங்கியிருக்கிறார்! அவரைக் காணும் பொருட்டுத் தங்களை அங்கு அழைத்துப் போகவே நான் வந்திருக்கிறேன்!"

உத்தமசீலியின் மனம் உலைக்களமாகியது. சளுக்கிய விக்கிரமாதித்தரும் தளபதி வில்வேலியும் சேர்ந்து தம் அரசியல் சதி நாடகத்தின் முதல் அங்கத்தை ஆரம்பித்து விட்டார்கள் என்பதை அவள் புரிந்து கொண்டாள். நிஜமான அகளங்க அடிகள் ஆதுரசாலையிலே மரணப் படுக்கையிலே கிடக்கிறார் என்பதும், அவர் உடல் நலம் தேறி எழுந்திருக்க ஓரிரு வாரங்களாவது ஆகும் என்பதும் அவளுக்குத் தெரியாதா என்ன? எக்காரணத்தை முன்னிட்டும் அரசியல் சதியைத் தீண்டத் துணியாத அந்தத் தூய மாமுனிவரின் பெயரால் இங்கே ஏதோ ஒரு சதி நாடகம் நடத்த வந்திருக்கும் வேடதாரி யாராயிருப்பான் என்பதை அறிய அவள் மனம் துடித்தது. தன்னை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு, வில்வேலியுடன் பல்லவபுரம் அரண்மனைக்குப் புறப்பட அவள் தயாரானாள். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## அர்ரம் நவிர்ந்த அண்ணல்

"அவருடைய நீண்ட வாழ்க்கை கடினமான உழைப்பும், நிறைந்த செயல்களும் கொண்டது. குப்பையிலிருந்து மாணிக்கத்தைப் பொறுக்கி யெடுப்பது போன்று, சாதாரண மக்களைக் கொண்டு பல புதுமையான, புரட்சிகரமான முயற்சிகளில் ஈடுபட்டார். ஆயினும் இவ்வளவு செயல்களையும் கொண்ட அவரது நீண்ட வாழ்க்கையில் எந்தக் கட்டத்திலும் அபஸ்வரம் என்பதே இல்லை. அவரது பல்வேறு செயல்களும் இனிமையான நாதம் அளிக்கும் விதமாக அமைந்தன."

இவ்வாறு பெருமையாகக் கூறப்பட்டவர் மாந்தருக்குள் ஒரு தெய்வமான மகாத்மா காந்தி. இதைக் கூறியவர் பாரதப் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு. காந்திஜியைப் பல கோணங்களில் கண்டு அவர் கூறியவற்றைத் தொகுத்து இந்நூலாக்கப் பட்டிருக்கிறது. இரு மகா புருஷர்களின் மன இயல்புகளைக் கண்டறிய வாய்ப்பான நூல்.

திரு அ. இராமசாமியின் தமிழாக்கம் தங்கு தடையின்றி நீரோட்டம் போல் செல்கிறது. இந்நூலைத் தொகுத்தளித்தவர் ஸ்ரீ டி. கே. மகாதேவன்.

பிரசுரம்: தமிழ் நாடு காந்தி நினைவு நிதி, மதுரை: விலை: ரூ. 1–25.

## சோவியத் இளமொழிச் சிறுகதைகள்

சோவியத் ருஷ்யா எனக் கூறப்படும் பரந்து விரிந்த நாட்டில் இளமொழி மக்கள் வாழ்கின்றனர். பேசும் மொழி பலவாயினும், மக்கள் ஒரு யூனியனாக வாழ முற்பட்ட பிறகு, அங்கு வளர்ந்திருக்கும் இலக்கியங்கள் ஏராளமானவை. எட்டு இளமொழிக் கதைகளைத் தேர்ந்தெடுத்து, மாஸ்கோவின் அயல்மொழிப் பதிப்பகம், நம் தமிழில் தந்திருக்கிறது. இக்கதைகளைத் தமிழாக்கித் தந்துள்ளவர் திரு பூ. சோமசுந்தரம் அவர்கள். பழகு தமிழில் நேர்த்தியான முறையில் அவர் கதைகளைத் தந்துள்ளார். இத்தொகுதியில் வெளிவந்துள்ள ஒவ்வொரு கதையும், சோவியத் நாடு, தொழில் வளம், நிலவளம் ஆகியவற்றில் முன்னேறியது எப்படி என்பதைக் கூறுவதோடு அந்தப் பிரதேசத்து மக்களின் மன இயல்பையும் அழகாக எடுத்துக் காட்டுகின்றன.

விற்பனை உரிமை: என். ஸி. பி. எச். பிரைவேட் லிமிடெட், 6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை-2; விலை: ரூ. 1. 06.

## ஆத்ம நாதம்

சுவியோகி சுத்தானந்த பாரதியார் தமது யோகானந்த அநுபவத்தை ஆத்மநாதமாக ஒலிக்கிறார். இந்நூல் முழுவதும் அடிகளின் சுத்த ஆத்ம அநுவப் பாடல்கள் நிறைந்திருக்கின்றன. பாடல்கள் யாவும் மாவீடர்களின் ஆன்ம விடுதலைக் குரல் கொடுக்கின்றன. முதல் பகுதியான "ஆத்ம நாதம்" நூற்றிரண்டு பாக்களாலானது. "சுத்த பரிபூரண சுகானந்த வாரியே சுடர் பரவு சோதி மலையே!" என்றும், "ஆன்ம பரிபூரண அகண்ட சுக வாரியே, அறிவான பரதெய்வமே" என்றும் "அன்பாகி அறிவாகி, அறிவுக்குள் ஒளியாகி, ஆடல் புரியும் பரமனே" என்றும் பரம்பொருளுக்கு விளக்கம் தரும் சுத்தானந்தரின் வாக்கு மகா ஞானியாகிய தாயுமானவரின் உபதேசங்களை நினைவூட்டுவதில் வியப்பென்ன இருக்கிறது? ஞான புருஷர்கள் சென்றும் ஞானப் பாதையும், அவர்களுடைய ஆத்மானுபவமும் ஒரே பெருமையைத்தானே எப்போதும் எடுத்துச் சொல்லும்?

இரண்டாவது இதய தாகம். இப் பகுதியில் உள்ள பாடல்கள் அடிகளின் கடவுள் ஆர்வத்தில் மலர்ந்தவை, கடவுட் களிப்பில் கனிந்து வளர்ந்தவை. அருளாவேசத்தில் எழுந்து பறந்தவை.

மூன்றாவது பக்தி பரவசம். கணபதியைப் பற்றியும், சிவலோக நாதனைப் பற்றியும் சதாசிவ சக்தியைப் பற்றியும் அடிகள் அகங்கனிந்து அருளியிருக்கும் அருமையான பாடல்கள் இந்தப் பகுதியில் அடங்கி யிருக்கின்றன.

முழுவதும் இனிமை ததும்பும் இத்தமிழ்ப் பாடல்கள் திரும்பி ஆத்மானுபவ மயமாக விளங்கும் இந் நூல் வேதாந்த மார்க்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு ஒரு கருவூலம் எனக் கூறலாம்.

இறுதியில் ஞான முழக்கமும், வாழ்த்தும் காணப்படுகின்றன. ஆத்மானந்த அநுபவத்தினின்றும் எழுந்த பாடல்களை உரைத்துப் பார்த்துப் பொருளுணர்வதை விடச் சுவைத்துப் பார்த்துப் பொருளுணர்வதுதான் சாலச் சிறந்தது. அதற்குச் சுவாநுபூதி வேண்டும். அது இத்தகைய ஞான நூல்களில் ஈடுபட்டால் எளிதில் கிடைத்துவிடும்.

பிரசுரம்: ஆத்ம ஜோதி வெளியீடு, நாவலப்பிட்டி, இலங்கை; விலை: ரூ. 3.0

# Firestone

## பயர்ஸ்டோன்

# தூரத்திற்கும் உழைப்பிற்கும் உங்களுடைய சின்னம்

உலகெங்கிலும் கோடிக்கணக்கான மோட்டார் மற்றும் டிரக் ஓட்டுபவர்களுக்குச் சில சிறந்த காரணங்களினால் பயர்ஸ்டோனின் மீது தனி மதிப்பு! டயர் மற்றும் ரப்பர் ஆராய்ச்சியில் உலகில் பயர்ஸ்டோன் முன்னணியில் நின்று இன்று சிறந்த டயர்களையும் நாளை [illegible] சிறந்தவைகளையும் தயாரித்து வருகிறது. கடந்த 22 ஆண்டுகளாக இவ்விதமே பயர்ஸ்டோன் இந்தியாவில் டயர்களைத் தயாரித்து வந்திருக்கிறது. உண்மையாகவே, உங்கள் காரில் பயர்ஸ்டோன் டயர்களை விட வேறெந்த பாகமும் பூராவாகச் சோதித்து நிரூபிக்கப்பட்டதல்ல. பயர்ஸ்டோன் வாங்கும்பொழுது நீங்கள் எதைப் பெறுகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்!




கூடுதலான பாதுகாப்பு மற்றும் சிக்கனத்திற்கு

பயர்ஸ்டோன்

நீடு உழைக்கும் சாம்பியன் டயர்களைத் தேர்ந்தெடுங்கள்

G. 37 (a)




## 4. ஸமரஸத் தூதன்

ஸமரஸத் தூதனைச் சிறைசெய்து கொல்லத் துணிந்தனர். ஆம்! ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத்தான். பாண்டவருக்காகப் பாதி ராஜ்யம் கேட்கத் தூது சென்றான் ஸ்ரீ கிருஷ்ணன் துரியோதனன் சபைக்கு.

குறிப்பிட்ட ஜாடையைத் துரியோதனன் காண்பிப்பான். அதைக் கண்டதும் அவனுடைய கையாள் ஒருவன் ஒரு விசையைத் தட்டுவான். உடனே தான் உட்கார்ந்திருக்கும் ஆசனத்தோடு ஸ்ரீ கிருஷ்ணன் அதன் கீழ் குழிக்கப்பட்டிருந்த பாதாளச் சுரங்கத்தில் விழுவான். அங்கு அவனுக்காகக் காத்திருக்கும் 'குண்டர்கள்' உடனே ஸ்ரீ கிருஷ்ணன் மேல் பாய்ந்து அவனைத் தாக்கி....

இது துரியோதனன் முன்கூட்டியே செய்து வைத்திருந்த சதித் திட்டம்.

தன் பேச்சுத் திறன் முழுவதையும் செலவிட்டு ஸ்ரீ கிருஷ்ணன் நியாயத்துக்காகப் பாண்டவர் கட்சியை எடுத்துச் சொல்லி வாதாடினான். இதை ரஸிக்காத, ஏற்க மனமில்லாத கௌரவர் ஏளனமாகப் பேசினர்.

மேலும் ஸ்ரீ கிருஷ்ணன் வாதாடியதால் கோபமுற்ற துரியோதனன் சதிச் செயலை நிறைவேற்றுமாறு ஜாடை காண்பித்தான்.

கையாளும் விசையைத் தட்டி விட்டான். சிங்காதனத்தோடு ஸ்ரீ கிருஷ்ணன் விழ வேண்டிய தருணத்தில்...

ஆ! இதென்ன! வெளியே காய்ந்து கொண்டிருந்த சூரியன் ஸபா மண்டபத்தில் எப்படிப் புகுந்தான்? இல்லை! சூரியனில்லை! ஓர் ஆயிரம் சூரியன்... இல்லை, இல்லை... கோடி சூரியன் ஒன்றாய்த் திரண்டு நின்று அந்த ஒளியை....

பிரமிக்கத் தக்க ஒளி. கண்ணைப் பறிக்கும் ஒளி. தலையைக் கிறுகிறுக்க வைக்கும் ஒளி. சபையில் இருந்தவர்கள் பெரும்பாலோரும் மூர்ச்சை போட்டு விழுந்தனர்.

ஸ்ரீ கிருஷ்ணன் விசுவரூபமெடுத்தான்! விளைவு இந்த ஒளி மயம். யாரோ ஒரிருவர் தவிர மற்றவர் மயக்கமுற்று நிலை தவறினர்.

ரோட்டில் போய்க் கொண்டிருக்கும் போது எதிரில் வரும் மோட்டாரோ லாரியோ இரண்டு விளக்கைப் பிரகாசமாகப் போடுவதால் மேற்சொன்ன அனுபவத்தைப் பெறாதவரை இன்று நமது நகரங்களில் காணவே முடியாது. உடனே தலை சுற்றல். கண் இருளல் முதலிய அனுபவங்கள் தான். கண்ணென்னுவது? நரம்புகள் — தசைகள் என்னுவது? ரத்த அழுக்கம்....? ஹார்ட் பால்பிடேஷன் — ஹிருதயத் துடிப்பு—? இவ்வித அனுபவம் நிமிஷத்துக்கொரு தரமாகப் பல முறைகளும் பல தினங்களும் ஏற்படுமானால் அதை அனுபவிப்பவன் ஜீவித்திருப்பதே ஆச்சரியம்.

''ஐயா! எதற்காகத் தாங்கள் இந்த விளக்கை இவ்வளவு பிரகாசமாகப் போட்டு எங்களை இந்தச் சித்திரவதைக்குள்ளாக்குகிறீர்கள்?'' என்று ஒருவரைக் கேட்டேன்.

''காலையில் காரியாலயத்துக்குப் போகும் போது ரோடு நல்ல முறையில் இருக்கிறது. மாலையில் திரும்பி வீட்டுக்கு வரும்போது ரோட்டில் கண்டபடி கால்வாய்களும் 'அகழிகளும்' வெட்டி வைத்திருக்கிறார்கள். ரோட்டிலுள்ள விளக்குகளின் வெளிச்சமோ....?''

''விளக்குகளுக்கென்ன?''

''கடனெழவுக்கே என்று இருக்கும் விளக்குகளின் வெளிச்சத்தில் ஒன்றுமே தெரிவதில்லை. விளக்கைப் பிரகாசமாகப் போடா விட்டால் இந்தக் கால்வாய்களும், வாய்க்கால்களும், அகழிகளும் கண்ணுக்கே தெரிவதில்லை. அப்படிப்பட்ட நிலையில் காரை ஓட்டிச் செல்வது தற்கொலைக்குத் துணிந்த காரியமாக முடியும். ஆகவேதான் விளக்கை இவ்வளவு பிரகாசமாகப் போட்டுக் கொண்டு போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது....''

இந்த மாதிரி ஒன்றைத் தொட்டு ஒன்று என்று பெருகி இருக்கும் இன்னல்களை எப்படிச் சரிக்கட்டுவது? சீர்திருத்தத்தைத் தொடங்குவது எங்கே என்பதே நிச்சயிக்க முடியாத நிலை. சமீப காலமாகத்தான் இந்த பிளட்பிரஷர், தலைசுற்றல், மயக்கம் போன்ற தகலீஃப்கள் பெரும்பாலோரில் ஏற்படுவதைக் காண்கிறோம் என்பதற்குக் காரணங்களில் ஒரு சிலவற்றை இது வரையில் விளக்கியாயிற்று. வரும் சந்ததியினருக்காவது இவ்வித இன்னல் இல்லாமலிருக்க ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டாமா?

ரத்த அழுக்கத்தினால் தலை சுற்றலும் மயக்கமும் ஏற்படுவதுண்டு என்று சொல்லப் போக, அந்த ரத்த அழுக்கம் அதிகரித்தல் சமீப காலத்தில் மிகவும் மலிந்து கிடக்கிறது என்ற நிலையைக் காண நேரிட்டது. அவ்வாறு மலிந்து கிடப்பதற்கு இன்றைய வாழ்க்கையில் உள்ள நிலைமை எவ்வளவு தூரம் காரணமாகிறது என்பதை விவரிப்பதில் போய் முடிந்தது. இந்த ரத்த அழுக்கம் என்பது என்ன? அதனால் தலை சுற்றல் ஏற்படுவானேன்? ரத்த அழுக்கத்தைத் தவிரத் தலை சுற்றல் ஏற்படுவதற்கு வேறு காரணங்கள் உண்டா? இவற்றிற்கெல்லாம் சிகிச்சைக்கிரமமும் தடுப்பு முறையும் என்ன என்ற வகையில் நமது கவனம் செல்லவேண்டும்.

ஓயாது, தீராது மனத்தில் எழும் உத்வேகம்; ''ஆச்சா? ஆச்சா?'' என்று எப்பொழுதும் எதற்கெடுத்தாலும் துரிதப்படுத்திக் கொண்டிருக்கும் சுபாவம். ஆகவேணுமே ஆக வேணுமே என்ற மனத்தில் எழும் உத்தரடன் கூடிய கவலை. தான் நினைப்பது போல் துரிதமாகத் தனது திட்டங்கள் நடக்கவில்லை என்ற காரணத்தால் பொறுமையை இழந்து எப்போதும் ஒரு கடுகடுப்பு — சிடுசிடுப்பு— கோபம்—தாபம், தூர்வாஸரின் மன நிலை—

இப்படிப்பட்ட பல்வேறு காரணங்களால் மனத்தில் நிம்மதி இல்லாமல் நெருஞ்சில் முள் பரப்பிய நிலத்தில் நிற்பவன் போல் தவிப்பவனுக்கு ரத்த அமுக்கம் அதிகரிக்கும் என்று மட்டுமில்லை — ரத்தக் கொதிப்பே ஏற்பட்டு, அது தலைக்கும் ஏறி — தலை சுற்றல் மயக்கத்தை உண்டாக்குமென்றல்லாது — தலையே வெடித்து விடுமென்ற நிலையும் ஏற்படலாம்.

''அம்மா! பாலுணனை....'' என்று காலையில் நாலரை மணிக்கெல்லாம் சுப்ரபாதம் பாடுகிறான் பால்காரப் பொன்னுச்சாமி.

''பூமா! பால்காரன் வந்திருக்கிறான்!'' என்று சொல்லி விட்டுத் திரும்பிப் படுத்துப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொள்கிறார் வீட்டு எஜமான் ஸ்ரீமான் ஸ்வாமி.

தூளியில் தூங்கும் பூமாவா பால் வாங்கப் போக வேண்டியவள்! இல்லை. அது தனது தேவிகளைப் போய்ப் பால் வாங்கும்படி பணிக்கும் பாணி தான். அந்தத் தேவிகளோ...

''கொஞ்சம் நீங்கதான் போய்ப் பாருங்களேன்!'' என்று சொல்லி விட்டு மெதுவாக எழுந்திருக்க முயற்சி செய்கிறாள்.

''என்னாலே முடியாது. எழுந்ததும் அந்த எருமை மாட்டின் முகத்தில் முழிக்க.....'' என்று தட்டிக் கழிக்கிறார் வீட்டு எஜமான்.



இப்படியாகத் தொடங்குகிறது ஒவ்வொரு நாளும். பிறகு, ஆபீஸிலிருந்து வீட்டு வேலைக்காகக் கொண்டு வந்த சில பைல்களைப் பார்க்க வேணும். கடைக்குப் போய்த் தேவிகள் ஒவ்வொன்றாய்ச் சொல்லும் சாமான்களை வாங்கி வந்தாக வேணும். இடையில் பின்கட்டு, முன்கட்டுவாசிகள் பேசக்கூடும் ஏச்சுக்கு மிடையில் — ஒரு சில நிமிஷம் அக்கப்போர். குராவடி ஒழியுமா என்று கண்குத்திப் பாம்பாக இருந்து குளித்ததாக ஒரு பேர் வைக்கும் சடங்கு. இதற்குள் ஆபீசுக்குப் போக நேரமாயிற்றே நேரமாயிற்றே என்று இறக்கை கட்டிக் கொண்டு பறப்பது.. தவிப்பது. ''இன்னும் சமையல் ஆகவில்லையா? சரி, ஆனமட்டும் போதும். போடு'' என்று அவசரப்படுத்தல்.... வெந்ததோ வேகாததோ—மென்றோ மெல்லாமலேயோ எப்படியோ சாப்பிட்டு விட்டு அவசரமாக டிபன் பாக்ஸ் — அல்லது பொட்டலத்தையும் காத்துக் கொண்டு பஸ் ஸ்டாண்டுக்கு ஓடியாவது தம் கோட்டுக்குள் புகுந்து கொள்ளும் கோலம்... அப்பப்பா! இந்த மனுஷனுக்கு இரத்த அமுக்கம்தானா ஏற்படும்? இன்னும் என்ன வெல்லாமானாலும் ஏற்படலாமே!

ஒரு கட்சியாகச் சொல்லவில்லை. வீட்டிலுள்ள அந்த அப்பாவி தேவிகளுக்குத்தான் என்ன? அதிகாலையில் காப்பிக் கடை. வீட்டிலுள்ளவர் காப்பியைக் குடித்து விட்டு அப்படியப்படியே காப்பிப் பாத்திரத்தை வைத்து விட்டுப் போய் விடுவர். அக்காப்பிப் பாத்திரங்களைக் கழுவுவது முதல்—காய்கறிகளை நறுக்கிச் சமைப்பதும் — 'அவரு'க்கு மத்தியானத்துக்கு ஏதாவது தயாராக்குவதும்... கைகால் ஓடாது. இப்படியும் அப்படியும் காலை ஒன்பது மணி அல்லது ஒன்பதரைக்குள் வீடு கல்யாணம் பட்டபாடு தான். அந்த வீட்டின் எஜமானி அம்மாளை என்ன வென்பது? பாவம், பம்பரம் சுழல்வது போல் சுழன்றாலும் போதாது.

பின்னையாண்டானைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். நேரமாயிற்று என்பதை 'நாழியாயிற்று' என்று சொல்லும் வழக்கம். நீட்டி முழக்கி நாழியாயிற்று என்று சொல்லவும் அவனுக்குப் பொழுதில்லை. ''உம்... உம்.... நாச்சு... நாச்சு'' என்று பறக்கிறான். ''நாழியாச்சு'' என்பதைத்தான் 'நாச்சு' என்கிறான். வீட்டில் இவன் தங்கை தமக்கைகள் இவனை 'நாச்சு' என்று அழைக்கவே தொடங்கிவிட்டனர். அவ்வளவுதான்; இதைத் தொடர்ந்து பாங்களுக்குள் ஒரு சண்டை. அம்மா வந்து—அவளுக்கு இருக்கும் தொல்லைகள் நடுவில்—இவர்கள் சண்டையை விலக்கிவிட வேண்டும். அப்பா, ஸ்ரீமான் ஸ்வாமிகளோ.....? ''என்ன இது வீட்டில் ரகளை..?'' என்று தூர்வாசராக மாறி விடுவார். வீட்டில் அமைதிக் குறைவு அதிகரிக்குமேயன்றிக் குறையாது. முக்கால்வாசி குடும்பங்களின் வாழ்க்கை இப்படிப்பட்டதுதான். இதில் யாருக்குத் தான் தேகாரோக்கியம் இருக்கும்?

இப்படியாக மன நிம்மதி என்பதே இல்லாத வகையில் இன்று நமது வாழ்க்கை அமைந்துள்ளது. இந்த அமைதியற்ற மனநிலை ரத்த அமுக்கம் அதிகரிக்க ஒரு முக்கிய காரணமாகிறது. இவ்வளவு விஸ்தாரமாக இவ் விஷயத்தை விளக்கியதன் லட்சியம் என்ன? வாழ்க்கை என்பதில் பல மேடும் பள்ளமும் இருக்கத்தான் செய்யும். அதற்கெல்லாம் ஈடுகொடுத்துத்தானாக வேண்டும். இதை ஒரு கலையாக எண்ணிக் கொண்டு மனத்தின் அமைதிக்குச் சிறிதும் பங்கம் ஏற்படாமல் வாழ்க்கையை நடத்த முயற்சி செய்வோமானால் இந்த ரத்த அமுக்கம், அதன் விளைவான ஆயிரம் தொல்லைகள் இவற்றைத் தவிர்க்கலாம். அல்லது ரத்த அமுக்கம் ஓரளவு ஏற்பட்டாலும், அதன் விளைவுகள் பொருட்படுத்தும் அளவுக்குப் பெருகாமலாவது நிறுத்திக் கொள்ளலாம்.

''தவிர்க்க முடியாத இன்னலை ரஸிக்கப் பயிலுங்கள்'' என்று ஓர் அமெரிக்கப் பழமொழி இருப்பதாக எனது நண்பர் ''ஸ்ரீ கிறுக்கு'' சொன்னார். இதில் எவ்வளவு பெரிய உண்மை இருக்கிறது பாருங்கள். இதைத் தெரிவிக்கத்தான் இவ்வளவு தூரம் எழுதினேன்.

''ஆமாம், இந்த ரத்த அமுக்கம் மனத்தின் வெறும் உத்வேகத்தினால்தான் உண்டாகிறதா? அதுவா இந்தத் தலை சுற்றல் மயக்கம், இருதயத் துடிப்பு, தூக்கமின்மை இவைகளை உண்டாக்குகிறது? சரீர சம்பந்தமான காரணங்கள் இல்லையா....?'' என்கிறீர்களா?




ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

திடீர் Dhideer (INSTANT)

## தக்காளி சாம்பார் - ரசம்

(2 தனி பவுடர்கள்)

3 நிமிஷங்களில் தயார்

மேற்படி பவுடர்களைத் தண்ணீரில் கலந்து 3 நிமிஷம் கொதித்தவுடன் உபயோகத்திற்குத் தயார். இயற்கையான மணம், ருசி மற்றும் வாசனை!

ஸ்ரீ கணேஷ்ராம் & கோ. (போன்: 28665) 46, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

---

tik-20

## டிக்-20

மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது



கெய்கி
டயஸினுன்



டாடா-பைஸன் தயாரிப்பு

---




## உலக மார்க் ஷண்முகம் பட்டணம் பொடி

100 வருடங்களுக்கு மேல் பிரக்யாதி பெற்றது.

ORIGINAL SHUNMUGAM SNUFF (ESTD.1839) Co.
POST BOX No.140. MADRAS-1

கச்சேரி முடிந்த
வுடன் தேங்காய்
மூடிகளை வாங்கிண்டு
நேரே வீடு வந்து
சேரவும்
— மனைவி

அந்த இரண்டு
தேங்காய் மூடிகளையும்
ஒரே விலை சொல்லிக்
கொடு! எடுத்துக்கறேன்!

சாமா




"சார், சார்! நெருப்பு நெருப்பு!"
"எங்கே சார்?"
"அந்த வீட்டில்!"
"எந்த இடம்?"
"மேல் மாடி"
"இது ஏதுடா வம்பு! விலாசத்தைச் சொல்லாட்டா நாங்க எப்படி சார் அங்கு வரமுடியும்?"
"உங்க நெருப்பணைக்கும் என்ஜின் தான் வரப்போகிறதே, அதில் ஏறி வந்து விடுங்கள்!"

எப்போ பார்த்தாலும் நீ பேசி 'போர்' அடிக்கறே! எப்படியாவது நீ இங்கே யிருந்து தப்பிச்சிண்டு போக ஒரு வழியைப் பாரேன்!



வாத்தியார் வீட்டுக் கல்யாணம்





சீதா மறு பிறவி எடுத்து விட்டாள்.

டாக்டரைப் பொறுத்தவரை அப்படித்தான் சொன்னார். அவருக்குத் தெரியும். 'பெரிய உயிரை' யாவது காப்பாற்றி விட வேண்டுமென்று தவித்த தவிப்பும், துடித்த துடிப்பும், ஆண்டவனிடம் மானசீகமாக அவர் இறைஞ்சிய வேண்டுதலும் பலித்து விட்டன. அதன் பலன்தான் சீதா மறு பிறவி எடுத்தது.

'பிரசவ அறையிலேயே என் தெய்வத்தைத் தொடர்ந்து நானும் போயிருக்கக் கூடாதா?'

மனச் சலிப்பில் சீதா நெட்டுயிர்த்தாள். உடல் பலவீனம் மட்டுமல்ல, அப்படி அவள் நினைத்ததற்கு உள்ளத்தில் ஏற்பட்ட பலவீனம், வாழ்வில் இருந்த பிடிப்பு கழன்று விட்ட நிலை, எல்லாவற்றுக்கும் மேலாகக் 'கொண்டவன்' காட்டி வரும் சகிக்க முடியாத அலட்சியம் — எல்லாமாகச் சேர்ந்துதான் அந்த முடிவுக்கு அவளை வரச் செய்தன.

துடிப்பில் ஜீவன் செத்த நிலையில், ஆனால் உடலில் ஜீவன் இயங்கும் வகையில் சீதா படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தாள். தெருப் பக்கத்தை ஒட்டிய அறை அது. மூலைச் சன்னல் மூலம் தெருவைப் பார்க்கலாம். படுக்கையில் ஒரே பக்கமாகப் படுத்து, உடம்பில் வலி எடுத்து விட்டது. வலி கண்டு துவண்டு, 'புரண்டு படுத்துக் கொஞ்சம் நோவைக் குறையேன்' என்று உடல் கெஞ்சியும், பிடிவாதமாக அவள் ஒரே நிலையில் படுத்துக் கொண்டிருந்தாள். கட்டிலுக்குப் பக்கத்தில் கை எட்டும் தொலைவில் வலை பீரோவில் பழம், சத்துணவு டானிக்குகள் மருந்துப் புட்டிகள், சாறு பிழியும் கண்ணாடிக் கிண்ணம், டம்ளர் எல்லாம் இருந்தன.

'அன்பே இல்லாத கைகளால் வைக்கப்பட்டவை அவை. அவற்றைத் தொடுவதுகூட உடம்புக்கு ஆகாது. தொட்டாலே அப்படி. சாப்பிட்டால்....? குமட்டிக் கொண்டு வந்து விடும்!'

வெறுப்புடன் வலை பீரோவைப் பார்த்தவள், பெருமூச்சு விட்டுத் தலையைத் திருப்பிக் கொண்டாள். அவள் தலை மாட்டுக்குமேலே விழிக் கோணத்தின் நேர் பார்வையில், பானுவின் படம் மாட்டப்பட்டிருந்தது. அந்த வீட்டுக்கு அவள் வலது காலை எடுத்து வைத்து நுழைவதற்கு முன்பே அங்கே மாட்டப்பட்டிருந்த படம் அது. புதிதாக அதைப் பார்ப்பவள் போல் தலைதூக்கிப் பார்த்தாள் சீதா.

அழகிய பற்கள் பளிச்சிட, அற்புதச் சிரிப்பின் ஒளி முகத்தில் தேங்க, அழகாக அதில் காட்சியளித்தான் பானு.

'கொள்ளை கொள்ளும் கள்ளமில்லா வெள்ளைச் சிரிப்பு. குழந்தை முகம். மாசு மறுவற்ற பார்வை. அப்பேர்ப்பட்ட குழந்தை முகமும், கொள்ளைச் சிரிப்பும், மாசற்ற பார்வையும் இப்போது எங்கே போய் விட்டன? நிழல் கவிந்த வானம் போல், இருள் சூழ்ந்த நிலவு போல் அவர் முகம் மாறி விட்டதே! சிரிப்பு அறவே மறைந்து விட்டதே! ஒளி கூத்தாடும் கண்களில் சோகம் இரையாகத் தொங்குகிறதே? தான் அப்படி ஆகி விட்டதற்குக் காரணம் நான்தான் என்று எண்ணுகிறாரா? எண்ணுகிறாரா என்னவா? எண்ணித்தானே, என்னைப் பார்க்கவே பிடிக்காமல் ஒதுங்குகிறார்! இந்த அறையினுள் நுழையும் போதே பாம்புப் புற்றுக்குள் கையை விடுகிறவர் போல நடுங்குகின்றனவே அவர் கால்கள். முகம் இருளடைந்து விடுகிறதே. எப்படி இருந்தவர், எப்படி மாறிவிட்டார்? 'சீதா, சீதா' என்று உயிரை விட்டவர், சீதா ஒருத்தி இருக்கிறாள், பெற்று விட்டு, பெற்ற உயிரைப் பறி கொடுத்து விட்டுப் படுக்கையில் குலையுயிராய்க் கிடக்கிறாள் என்பதை அடியோடு மறந்து




விட்டாரே. அடை மழையாய்ப் பொழிந்த அன்பை அடைத்து விட்டாரே. கானலின் வெம்மையையும், ஏமாற்றத்தையும் மிஞ்ச விட்டு விட்டாரே?'

நினைப்பின் சூடு இதயத்தை அழுத்தியது. நெஞ்சின் ஆற்றாமை, கண்களில் கலந்த போது ஈரத் துணியில் சொட்டும் நீராகக் கண்ணீர் மணிகள் விழியோரத்தில் சேர்ந்து சரிந்தன, கன்னத்தில்.

சீதா தவித்து அழுததில் தவறில்லை. பானு அப்படித்தான் ஆகி விட்டான். அவள் மீது என்னமாய் அன்பைப் பொழிந்தான்? அவளைத்தான் மணப்பேன் என்று ஒற்றைக் காலில் என்ன, தலைகீழாகவே நின்றான் தந்தையிடம். இத்தனைக்கும் அவனுடைய சொந்த அத்தை பார்வதியின் பெண் பாமா அவனுக்காகவே பிறந்திருக்கிறாள் என்று அவன் காதெல்லாம் கொட்டி முழக்கி விட்டிருந்த பிறகும், சீதா

வைத்தான் மணப்பேன் என்று நின்றான். அத்தையின் பேச்சு அவனைப் பொறுத்தவரை காய்ந்த மணலில் பாய்ந்த நீரான கதையாகத் தான் இருந்தது. 'கீதாவும் ஒரு வகையில் தூரத்து உறவுதானே? அவளைப் பாருங்கள்!' என்று பெற்றோரிடம் அடித்துச் சொல்லி விட்டான்.

பார்வதி அம்மாள் 'லபோ திபோ' வென்று அடித்துக் கொண்டாள். தன் பெண் பாமா அந்த வீட்டில் புக வேண்டும் என்பது இரண்டாம் பட்ச ஆசைதான். ஏராளமான ஆஸ்திக்கு ஒரே வாரிசான பாலுவின் கரம் பற்றி, சொத்துக்குச் சொந்தக்காரி ஆகவேண்டும் என்பதுதான் அத்தையம்மாளின் முதலும் முடிவுமான ஆசை, அபிலாஷை.

அதனால் தன் அண்ணனிடம், அதாவது பாலுவின் தந்தையிடம் — [illegible] நின்றாள் பாமாவைக் கட்டச் சொல்லி. தங்கையைச் சமாதானப்படுத்துவதா அல்லது ஒரே மகனின் ஆசையை — அவரைப் பொறுத்த வரை பிடிவாதம் — நிறைவேற்றுவதா என்று தவித்த போது பாலுவே அவருக்குக் கை கொடுக்க முன் வந்தான். ''அப்பா, பாமாவுக்கு என்னை மணப்பதில் இஷ்டமில்லையாம். இதை அவளே என்னிடம் சொன்னாள். அவள் மனம் அவள் பக்கத்து வீட்டுக் கோபுவிடம் சென்று விட்டதாம். அத்தை சொல்வதில் அர்த்தமில்லை. ஆக வேண்டியதற்கு வழி செய்யுங்கள்!'' என்று தந்தைக்கு வழி வகுத்துக்கொடுத்தான். பாமா, விஷயத்தை அவனிடம் சொல்லி, 'வேறு யாரிடமும் சொல்லாதீர்கள்' என்று கேட்டுக்கொண்டாள். ஆனால் பாலு அப்பாவிடம் மட்டும் சொல்லிவிட்டு'' இது உங்களோடே'' என்று சொல்லி வைத்தான்.

போதாதா அவருக்கு? தம் தங்கையை ஒரு வழியாகச் சரிக் கட்டி விட்டார். அவள் மூக்கால் அழுத போது பாலு, கீதாவின் சங்குக் கழுத்தில் மூன்று முடிச்சுக்களைப் போட்டான்.

கீதாவை அவன் சந்தித்த விதமே அலாதி.

அவளைச் சந்தித்த பிறகுதான் அவளும் தனக்கு உறவு என்று அவனுக்குத் தெரியவந்தது. மற்றப்படி முதலில் கீதாவின் குடும்பத்தைப்பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது.

ஒரு நாள் கீதாவின் வீட்டில் மின்சார விளக்குக் கெட்டு விட்டது. அதைச் சரி செய்ய வழி தெரியாமல் விழித்துக் கொண்டிருந்த கீதாவின் தாய், வழியே சென்று கொண்டிருந்த பாலுவின் உதவியை நாடினாள். அன்று தான் கீதாவை முதன் முதலில் பார்த்தான் பாலு. கீதாவின் பேரழகு — குப்பையில் வைரமாக இருந்த பேரழகு — அவனை அடியோடு மயக்கியது. ஸ்விட்ச் போர்டருகே சிறிய சிம்னி விளக்கைப் பிடித்துக் கொண்டிருந்த கீதாவின் எழில் முகத்தை — சிம்னி வெளிச்சத்தில் செந்தாமரையாக ஒளிர்ந்த முகத்தை அணு அணுவாக ரசித்தான் பாலு. அருகே, மிக அருகே நின்று கொண்டிருந்த அவளுடைய நெருக்கம் அவனைப் புல்லரிக்கச் செய்தது. அவளைச் சூழ்ந்து, அவளிடமிருந்து கிளம்பிய மல்லிகை மணம் அவனை மயக்கியது. நான்கு கண்கள் இணை சேரும்போதெல்லாம் பெண்மை விழிகள் நாணத்துடன் நிலை தாழ்ந்தன. ஆண்மை கம்பீரமாகச் சுடர் தெறித்தது.

ரிப்பேர் முடிந்த பிறகு நடந்த பேச்சில் தூரத்து உறவு முறை வெளிப்பட்டது. கீதாவை ஏறிட்டுப் பார்த்தான் பாலு. அந்த ஒரு சந்திப்பிலேயே இருவர் மனமும் இடம் மாறிவிட்டதை இருவருமே அறிந்தனர்.

அதற்குப் பிறகு கீதாவின் வீட்டுக்கு அடிக்கடி பாலு போக ஆரம்பித்தான்.

''ஏன் இப்படி அடிக்கடி வருகிறீர்கள்?'' என்று கீதா ஒரு நாள் கேட்டாள்.

''அடிக்கடி வரவேண்டிய அவசியமிருக்கிறது. வருகிறேன்!'' குறும்பாகச் சிரித்தான் பாலு.

''அடிக்கடி வர வேண்டிய அவசியமில்லாமல் இருக்க வேண்டிய இடத்திலேயே வைத்துக்கொள்ள ஆசையில்லையா?'' கீதா இப்படிக் கேட்டுவிட்டாளே தவிர, மனம் என்னவோ 'திக் திக்'கென்று அடித்துக்கொண்டது. அதிகப்பிரசங்கித்தனமாகப் பேசிவிட்டோமோ என்னவோ என்று துடித்தாள்.

''ஆசை யில்லாமலா வருகிறேன்? கீதா, உன்னால் கேட்க முடிந்தது, கேட்டு விட்டாய். ஆனால் நான் என் அப்பாவை அப்படிக் கேட்க முடியுமா?''

''ஏன் முடியாது?''

''என் அத்தை இருக்கிறாளே, அத்தை. அவள் பெற்ற பாமாவை நான் மணக்க வேண்டுமாம். அது அவளுடைய ஆசை















யாம். என் ஆசையை அவன் கவனிக்கவில்லை. ஆனாலும் ஒன்று சொல்கிறேன் சீதா. மணந்தால் உன்னைத்தான் மணப்பேன். இது உறுதி.''

அவன் கையடித்துக் கொடுத்தபோது அவள் கண்கள் கலங்கிவிட்டன.

சில்லென்று கன்னத்தில் கண்ணீர் வழிந்தது. சீதா சட்டென்று கண்ணீரை வழித்துத் துடைத்தாள். உள்ளே பாலு வரும் ஓசை கேட்டது. பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தாள். கைகள் தாமாகக் கூந்தலைச் சரி செய்தன.

''சீதா!'' என்று பாலு அழைத்தான். அந்தக் குரலில் எதையும் காண முடியவில்லை அவளால்.

''ம்...!'' என்றாள் அவள்.

''மருந்து சாப்பிட்டாயா? உடம்பை அலட்டிக் கொள்ளாதே. ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லியிருக்கிறார் டாக்டர். பத்திரம்!'' என்று சொல்லிவிட்டு மருந்தை அவுன்ஸ் கிளாஸில் ஊற்றி அவளிடம் கொடுத்தான். வேண்டா வெறுப்பாக அதைக் குடித்தாள் சீதா. அவுன்ஸ் கிளாஸைக் கழுவி வைத்துவிட்டு, ''படுத்துத் தூங்கு!'' என்று சொல்லிவிட்டு அறையிலிருந்து வெளியேறினான் அவன்.

அவன் சென்ற திக்கையே வெறித்துப் பார்த்தாள் சீதா. மருந்து குடித்த வாய் கசந்தது. மனம் புழுவாய்த் துடித்தது. பொத்தென்று படுக்கையில் சாய்ந்துவிட்டாள் சீதா.

மாமியாரின் பிடிப்பற்ற போக்கு, வீட்டுப் பிறந்த பெண்ணின் சுடு சொற்கள், மாமனாரின் பட்டுக் கொள்ளாத் தன்மை ஆகியவற்றையும் பாலுவின் அன்பு மழை ஒன்றிலேயே கரைத்து வந்தாள் சீதா. ஆனால் எல்லாவற்றையும் அமுக்கி, இப்போது பாலுவே அலட்சியப்படுத்தி வருகிறானே? அதை நினைத்துத்தான் குமைந்தாள் சீதா.

'அவர் விரும்பிய வகையில் பிள்ளையைப் பெற்றுத் தரவில்லை என்றுதானே அவருக்கு இத்தனை அலட்சியம்? பாவி நான் என்ன செய்யட்டும்? எனக்கும் அந்த ஆசை இருக்காதே? கருவில் வளர்ந்த செல்வத்தை உருவாகக் காட்டாமல் அப்படியே கொண்டு சென்றுவிட்டானே காலன். நான் என்ன செய்யட்டும்? என் தப்பா அது? அதற்காக இப்படிப் பழி வாங்குவதா?

'ஓ' என்று மனம் கதறியது. தனித்துப் புரண்ட உள்ளம் தரை மீனாகத் துடித்தது.

இப்படித்தான் அன்றும் ஒரு நாள் சீதா தனித்துத் துடித்தாள்.

அந்த வீட்டுக்குச் சீதா மருமகளாய் வந்து பேரனைக் கொடுக்க இருக்கும் சமயம் அது. நிறை சூலியாய் இருந்தாள் சீதா. மணி இரண்டிருக்கும். கூடத்து ரூமில் ஓய்வாக அவள் சாய்ந்து கொண்டிருந்தாள். கொஞ்ச நேரத்துக்கு முன்புதான் பாலு அவளைக் கொஞ்சிவிட்டுப் போயிருந்தான்.

''சீதா! நீ எவ்வளவு அழகாய் இருக்கிறாய் தெரியுமா?'' அவளுடைய அழகிய கரங்களில் அடுக்கியிருந்த வளைகளை முழங்கை வரை ஏற்றிவிட்டுக் கன்னத்தில் ஒரு செல்லத் தட்டு தட்டி அவன் பேசினான்.

கணவனின் இதமான தழுவலும் உரிமைத் தட்டும் அவளைக் குலுங்க வைத்தன. ''தெரியவில்லையே!'' என்றாள் குறும்புச் சிரிப்புடன்.

''போக்கிரி! கண்ணாடியில் பார் தெரியும்!''

''கண்ணாடி என் முன்னாலேயே இருக்கும்போது நான் ஏன் வேறு கண்ணாடியில் பார்க்க வேண்டும்?''

''உன் முன்னாலேயா? கண்ணாடியா? எங்கே?'' பாலு விழித்தான்.

லிப்டன்

LAOJEE

லாவோஜி டீ

சிக்கனத்தின் சின்னம் சிறப்பின் சிகரம்



''அசியே, நடிப்பே! போதும். உங்கள் முகம் தான் கண்ணாடி. அந்தக் கண்ணாடி ஒன்றுதான் என் அழகை உள்ளது உள்ளபடி காட்டும். அந்தக் கண்ணாடியில் ஒன்றும் கீறல் விழாது; விழக் கூடாது. தூசு படியாது; படியக் கூடாது. கறை படியாது; படியக் கூடாது. அந்தக் கண்ணாடி ஒன்றில்தான் என் அழகும் பிரதிபலிக்க வேண்டும். அந்தக் கண்ணாடியே என்றும் என் அழகைக் காட்டட்டும்; ரசிக்கட்டும்!'' —சீதா உருகிப் போனாள். பாலு சிலிர்த்துப் போனான்.

''சீதா! எவ்வளவு அழகாகப் பேசிவிட்டாய்! நீயே இப்படிப் பேசும்போது உன் மணி வயிற்றில் இருக்கும் நம் மகன் எப்படிப் பேசுவான்! அவன் ஏதாவது பேசுகிறானா?''

''அவன் சொல்வதும், பேசுவதும் உங்களுக்குக் கேட்காது. எனக்குக் கேட்கிறது'' என்று கூறிச் சிரித்தாள் சீதா.

''என்ன? என்ன சொல்லுகிறான் பயல்?''

''அவன் அப்பாவைப் போல் படிக்க வேண்டுமாம். முதலில் அவனைக் கான்வென்டுக்கு அனுப்ப வேண்டுமாம். பிறகு பஸ்ட் கிளாஸ் காலேஜில் சேர்க்க வேண்டுமாம். பட்டதாரி யாக்கி மேல் நாட்டுக்கு அனுப்ப வேண்டுமாம். இன்னும்....!''

''போக்கிரி! போக்கிரி! நான் சொன்னதையே என்னிடம் அளக்கிறாயே!'' செல்லமாக அவள் காதைத் திருகினான் பாலு.

''அத்தான்! குழந்தை என்றால் உங்களுக்குக் கொள்ளை ஆசையா?'' குழந்தைத் தனமாகக் கேட்டாள் சீதா.

''இல்லாமலா சீதா! நீ தரப்போகும் செல்வன் எப்படி இருப்பான் தெரியுமா?''

''ஓ! தெரியும். நம் படுக்கை அறையில் மாட்டி வைத்திருக்கிறீர்களே, அந்தப் பயலைப் போல!'' சீதா கலகலவென்று சிரித்தாள்.

''ம்... நீ கிளிப்பிள்ளையேதான். அதையும் நான் தானே சொன்னேன்?''

''ஆமாம் அத்தான்! நீங்கள் சொல்வதைத்தான் நான் சொல்வேன். உங்கள் எண்ணத்தைத்தான் நான் பிரதிபலிப்பேன். எனக்கென்று தனியாக என்னமோ நினைப்போ இல்லை. எல்லாமாக நீங்கள் இருக்கிறீர்கள்.'' அழகிய கண்களால் தன் நோக்கை அவன்மீது திருப்பினாள் சீதா.

பெருமிதச் சிரிப்பு ஒன்றைச் சிந்தி, அவளுடைய மெல்லிய தோளைத் தட்டிவிட்டுப் பாலு வெளியில் சென்றுவிட்டான்.

''ஏண்டியம்மா! வந்தவங்களை வான்னு கூடக் கூப்பிட மாட்டியா?''

திடுதிப்பென்று பார்வதியின் குரல் ஏகத்தாளமாகக் கேட்டது. அழகிய கனவு திடீரென்று கலைந்து விடப்பட்ட நிலையில் தன் நிலைமையையும் மறந்து பதறியடித்துக் கொண்டு எழுந்தாள் சீதா.

''வாங்க அத்தை! வாங்க. ஏதோ ஒரு...'' தடுமாறினாள் சீதா.

''ம்...வாங்கன்னுதான் கூப்பிடலே. வந்து சாப்பிடுங்கோன்னு வாய் வரல்லே. எப்படி வரும்? உட்கார்ந்து சாப்பிட்டுவிடுவாளே என்று பயம். அப்படி ஒண்ணும் உங்கள் வீட்டு ஆஸ்தியைக் கொட்டிக் கிட்டுப் போயிட மாட்டேன். ஒரு வாய் சோத்துக்குத் திக்கில்லாம நான் வரலே!'' பார்வதி அம்மாள் படபடவென்று பொரிந்தாள்.

வெறு வெட்டப் பூதம் அல்ல, ராட்சதன் புதப் பட்டதைப் பார்த்துவிட்டவள் போல் அரண்டு விழித்தாள் சீதா. என்ன சொல்வது என்று புரியாமல் திகைத்துக் கொண்டிருந்தபோது அவள் மாமியார் அங்கே வந்தாள்.



''வாங்க அண்ணி. என்ன சமாசாரம்?''

''ஒன்னுமில்லேடியம்மா. வர்றவங்களே வான்னுகூட உன் மருமக கூப்பிட மாட்டா போலிருக்கு. அதுதான் வேறொன்னுமில்லே!'' சோற்று விஷயத்தை, சோற்றில் பூசணிக்கா யாய் மறைத்துவிட்டாள் பார்வதி.

''இதுக்கா அண்ணி இப்படி? அதான் தெரிஞ்ச விஷயமாச்சே, அதது இருக்கவேண் டிய இடத்திலே இருக்கணும்.'' துவேஷத் தைக் கக்கிவிட்டு அத்தை யம்மாளை உள்ளே அழைத்துச் சென்றாள் கீதாவின் மாமியார்.

கீதா கலங்கிப் போய்விட்டாள். எத்த னையோ முறை அவர்களிருவரும் அவளைத் துச்சமாகப் பேசியிருக்கிறார்கள் என்றாலும் சற்று முன்னால் பேசியது உச்சத்தின் எல்லை யில் நின்று பேசிய பேச்சாகவே அவளுக்குப் பட்டது.

ஆனால் இரவு பாலு அந்த விஷயத்தைக் குறிப்பிட்டு, ''ஏன் கீதா, மத்தியானம் நடந் தது என்ன? சொல்!'' என்று கேட்டபோது, ''இதெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தால் உங்கள் மனம் புண்படும், அத்தான்! பெரிய வர்கள் நல்லதோ கெட்டதோ சொல்வதற் கும், சிறியவர்கள் கேட்பதற்கும்தான் இருக் கிறோம். எது எப்படி இருந்தாலும் உங்கள் அன்பு இருந்தால் போதும். அதில் துளிக் குறைந்தாலும் நான் நெருப்பில் புழுவாய்த் துடித்துப் போய்விடுவேன்!'' என்றாள் கீதா.

கீதாவின் பெருந்தன்மை பாலுவை மெய் சிலிர்க்கச் செய்தது. இருந்தாலும் அவன் குறும்பு அவனை விடவில்லை.

''ம்...எல்லாம் மகன் பிறக்கும் வரை தான். அப்புறம் என்னை அடியோடு மறந்திடுவே!''

''மறக்கக்கூடிய அளவுக்கு மகனிருந்தால் நான் அவனையே மறந்து விடுவேன்!''

குழந்தை வளர்ப்பில் அவர்கள் பேச்சு தடம் மாறியது.

''ஆனால் இன்று அவர் அன்பே திசை மாறி விட்டது!''

ஒட்டிக் கிடந்த வெளுத்த உதடுகள் பிரிந்த போது, உள்ளொலி முணுமுணுப்பாக எழுந் தது. தன்னைப் பார்க்கவோ, நினைக்கவோ பாலுவுக்குப் பிரியமில்லை என்று அவள் மனம் மறுகியது. அதனால்தான் தன்னைக் கண்ணாடி யில் பார்க்கவோ, தன்னைப் பற்றி நினைக் கவோ அவள் கசந்தாள். கசப்பான மருந்து சாப்பிட வேண்டிய நேரம் வந்து விட்டது. வலை பீரோவைத் திறந்தாள். மருந்துப் பாட்டில் மூடியைத் திறந்து அவுன்ஸ் கிளாஸில் மருந்தை ஊற்றினாள். ஏதோ ஒரு வாசனை மூக்கை அடைத்தது. பாலுவின் அன்பில்கூட இப்படித்தான் மணத்தையடைக் கும் நெடி தோன்றி விட்டது. வேண்டா வெறுப்பாக மருந்தைக் குடித்தாள். நல்ல நாளிலேயே கசக்கும். மனம் கசந்து, வேப் பங்காயாக வாழ்க்கை மாறிவிட்ட இப்போது மருந்து குடலைப் புரட்டி, வாயைக் குமட்டிக் கொண்டு வந்தது. வாயை இறுக மூடி, அடக் கிச் சமாளித்து விட்டாள் கீதா.

மனப் புகைச்சலை அவளால் சமாளிக்க முடிய வில்லை. பற்றாமல், புகையாக உள்ளுக்குள் குமைந்தது.

'குழந்தை, குழந்தை என்று உயிரை விட் டார். குழந்தையை உயிரோடு தராத கார ணத்தால்தான் என்னை வெறுக்கிறாரா? ஆஸ் பத்திரிக்குப் போகும்போது எவ்வளவு என் மீது அன்பைப் பொழிந்தார்?'

கீதாவுக்கு வலி கண்டபோது நல்ல காலமாகப் பாலு வீட்டில் இருந்தான். விஷய மறிந்த உடனேயே டாக்ஸியைப் பிடித்துக் கொண்டு குடும்ப டாக்டரின் நர்ஸிங் ஹோமுக் குப் பறந்தான். போகும் வழியிலேயே கீதா துவள ஆரம்பித்தாள்.

''கீதா! பயப்படாதே. ஆண்டவன் நமக்கு ஒரு குறையும் வைக்க மாட்டான். நீ மட்டும் தைரியமாக இரு. நம் கனவுகள் நிச்சயம் பலிக்கும்!'' கீதாவைத் தேற்றினான் பாலு.

கீதா துடித்தாள்.

இரண்டு நாள் நர்ஸிங் ஹோமில் அவள் துடிப்பு மூன்றாம் நாள் அதிகாலையில் அடங் கியது. ஒருபுறம் மகிழ்ச்சியும், மறுபுறம் துன்ப மும் கலக்க, லேடி டாக்டர் கைகளைத் துடைத் துக்கொண்டே வெளியில் வந்தார். பாலுவை நன்கு அறிந்தவர் அவர். அவன் முதுகைத் தட்டி, தனியே அழைத்துச் சென்றார்.

''பாலு! மனசைத் தேற்றிக் கொள். என் னால் பெரிய ஜீவனைத்தான் காப்பாற்ற முடிந் தது. அது என்னால் என்பது கூடத் தப்பு. ஆண்டவன் உன் தூய பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து மனம் இரங்கி, அருள் புரிந்த தன் பலன்தான் கீதா பிழைத்தது. உங்கள் விருப்பம் போல் மகன்தான் பிறந்தான். என்றாலும் அவன் உங்கள் முகம் கண்டு சிரிக்க வும், நீங்கள் அவன் சிரிப்பைக் கண்டு மகிழ வும் கொடுத்து வைக்காது போய்விட்டீர்கள். இந்த அளவோடு முடிந்தது நீ செய்த புண்ணி யம். ஆண்டவன் சித்தம் அப்படி. மற்றப்படி பயப்படாதே!''

லேடி டாக்டரின் பேச்சில் தாய்மையும், கனிவும் கனிந்து கிடந்தன.

இன்றே நீங்கள் கேட்டுப் பெறவேண்டும்
ஆயுள் இன்சூரன்சுப்
பாலிசி. ஏன்?

# நான்கு நல்ல காரணங்கள் இதோ!

1. நீங்கள்
2. உங்கள் அன்பு மனைவி
3. உங்கள் அருமைக் குழந்தைகள்
4. உங்கள் ஆருயிர் நாடு.

## உங்களுக்கு ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி இப்பொழுது அவசியமாகவும், அவசரமாகவும் தேவை.

★ நீங்கள் தனியராயின், உங்களுக்காக.
★ நீங்கள் மணமானவராயின், உங்களுக்காக, உங்கள் மனைவிக்காக, உங்கள் குழந்தைகளுக்காக.
★ நாட்டிற்காக—நீங்கள் ஆயுள் இன்சூரன்சு மூலம் சேமிக்கும் சேமிப்பு நாட்டின் பாதுகாப்பு முயற்சிகளுக்குத் தேவை.

தயங்குவதற்கோ, தாமதிப்பதற்கோ, மன்னிப்புக் கோருவதற்கோ நேரமல்ல இது. எல்.ஐ.சி முகவரை (ஏஜெண்டை) நாடுவீர் இன்றே. உங்கள் தேவைகளுக்குகந்த பாலிசியினைத் தேர்ந்தெடுத்துத்தர உதவுவார் அவர். ஆயுள் இன்சூரன்சு பற்றி அவரிடம் உடனே கலந்து பேசுங்கள். காலந்தாழ்த்தாமை சாலச் சிறந்தது. உங்களுக்காகவும், உங்கள் குடும்பத்திற்காகவும், நாட்டிற்காகவும் எடுத்திடுவீர் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி.

## ஆயுள் இன்சூரன்சு
போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.



ASP LIC 96 TM

> பாமர மனிதனை விடச் சிறிது பண்புள்ள வார்த்தைகளைப் பேசத் தெரிவதால் நீங்கள் உங்களைப் பெரியவர்களாகக் கருதுகிறீர்கள். பண்பில் பெரியவர் நாம், அறிவில் பெரியவர் நாம் என்ற எண்ணம் என்று உங்களிடம் புகுகின்றதோ அன்றே நீங்கள் அழிந்து விடுவீர்கள். எல்லாத் தீமைகளையும் விடப் பயங்கரமானது அறிவுச் செருக்கேயாகும்.
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

மனக் கனவுகள் கனவுகளாகவே போய் விட்டன. நெஞ்சின் ஆசை யெல்லாம் நெஞ்சிலேயே மறைந்து விட்டது. உள்ளத்து உணர்வில் பூத்துக்-குலுங்கிய மகிழ்ச்சி சருகாகி அங்கேயே சமாதியாகி விட்டது.

நிராசையுடன் பானு நடந்தான்.

சீதாவின் நிம்மதி போய்விட்டது. வீட்டுக்கு வந்தபோது பானுவின் போக்குப் புரியாமல் இருட்டில் தடுமாறுபவள் போல் அவள் தவித்தாள்.

அவள் படுத்திருக்கும் கட்டிலருகே வருவான். மருந்துப் பாட்டில்களைப் பார்ப்பான். பழங்களைப் பார்ப்பான். சில சமயம் அவை தொடப்படாமல் அப்படியே இருந்தால், "சீதா மருந்து சாப்பிடாமல் இருப்பது தப்பு. சாப்பிடு. வேளை தவறக்கூடாது. பழங்கள் உலராமல் பார்த்துக்கொள்!" என்று சொல்லிவிட்டு ஏறிட்டுப் பார்ப்பான்.

உதட்டளவில் பொய்யான கடமைக்காகப் பொங்கும் அன்பை — இல்லை பரிதாபத்தை — கண்டு சீதாவின் உள்ளத்தில் உணர்ச்சி புகையாக மூண்டு விடும். கலங்கும் கண்களை அவன் பார்க்கக் கூடாது என்பதற்காகத் தலையைத் தாழ்த்திக் கொள்வாள். நிமிர்ந்து பார்க்கும்போது பானுவின் இடம் காலியாக இருக்கும். தலையணையும் கண்ணீரும்தான் அவளைத் தாங்கித் தேற்றும்.

கணவனின் அலட்சியம் ஒரு பக்கம். அத்தையம்மாளின், "ம்...பொல்லாத பெண்டாட்டி கட்டிட்டான். பெத்துக் கொடுக்கத் துப்பில்லாத பெண்டாட்டி!" என்ற கரி நாக்கின் துவேஷம் ஒரு பக்கம். மாமியாரின் ஏசல் ஒரு பக்கம். அவள் புயலில் பஞ்சாக அலமந்தாள்.

'இன்னும் நான் ஏன் உயிரோடு இருக்க வேண்டும்?' இந்த வெறுப்பிலேயே சீதா மருந்துப் புட்டியை எடுத்துக் கவிழ்த்துவிடுவாள் சில சமயம். பானு கேட்டால், "கை தவறிவிட்டது!" என்று பொய் சொல்லுவாள்.

"வாங்க அண்ணி!"

அத்தையம்மாளை வரவேற்கும் மாமியின் குரல் சீதாவின் காதில் தெளிவாக விழுந்தது.

"உன் மருமக எப்படி இருக்கா?" அத்தையம்மாளின் குரலில் எகத்தாளம் தொனித்தது.

"அதை ஏன் கேக்கறீங்க? மருந்துப் பணம் தான் நாசம்!" மாமியாரின் குரலில் தெறித்த கசப்பு சீதாவை நெருப்பாகச் சுட்டது.

"ஆமாண்டி. அப்படியேதான் இருக்கணும். அந்த லேடி டாக்டர்...!" என்று அவள் எதையோ சொல்ல வந்தாள்.

"அத்தை!"

மௌனத்தின் முழக்கமாகப் பானுவின் குரல் ஒலித்தது. அத்தையம்மாளும், மாமியும் எப்படி நடுங்கினார்களோ, சீதா ஒடுங்கிவிட்டாள்.

பானுவின் குரல் கோடை இடியாக எழுந்தது.

"அத்தை! அம்மா! இனிமேல் சீதாவைப் பத்தி ஏதாவது பேசினா நான் பொறுக்க மாட்டேன். இதுவரை நீங்கள் பேசினது போதும். இனியும் பேச அனுமதிக்க மாட்டேன். பெற்ற மகனைக் கையில் எடுத்து வரக் கொடுத்து வைக்காமல், குற்றுயிரும், குறையுயிருமாக வந்திருக்கிற பெண்ணை ஏன் இப்படிச் சித்திரவதை செய்யறீங்க? எப்படி உங்க மனம் துணியுது? மகன் பிறப்பான், அவனை அப்படி வளர்க்கலாம், இப்படி வளர்க்கலாம் என்று ஒவ்வொரு நாளும் கனவு கண்டு, கோட்டை கட்டினேன். அழகான அந்தக் கனவை 'அவன்' கலைத்து விட்டான். கோட்டை முழுசா எழும்பறதுக்குள்ளே அதன் மேலே இடியைப் போட்டுட்டான் ஆண்டவன்.

"தேர் சுற்றி வந்தாலும் நிலைக்கு வந்தே நிற்கும்னு சொல்கிற மாதிரி எதைப் பற்றி, எப்படிப் பேசினாலும் குழந்தையைப் பற்றியே வந்து முடியுமேன்னு மனம் கலங்கிக்கிட்டு நானே அவள் கூடச் சரியாகப் பேச முடியாமல் தவிச்சிக்கிட்டிருக்கேன். எதைப் பற்றிப் பேசினாலும் குழந்தையைப் பற்றிக் கொஞ்ச நாளைக்கு அவகிட்ட பேசாதேன்னு டாக்டர் சொல்லியிருக்கிறார். அவ உடம்பு நல்லபடியாத் தேறணுமேன்னு கவலைப்பட்டுக்கிட்டு அவகூடச் சரியாப் பேச முடியாமே நானும் புழுங்கிக்கிட்டிருக்கேன். ஏன் ரெண்டு பேர் நெஞ்சிலேயும் தீயைக் கொட்டற மாதிரி நீங்க இப்படிப் பேசறீங்க?

"அத்தே! இனிமே சீதாவைப் பற்றி ஏதாவது பேசிக்கிட்டு இந்த வீட்டுக்கு வந்தே நான் மனிதனாக இருக்க மாட்டேன். தெரிஞ்சுக்குங்க. அம்மா? உனக்கு வாய்த்திருக்கிற மருமகள் பித்தளை இல்லே, தங்கம். சொக்கத் தங்கம். இதை மட்டும் புரிஞ்சுக்க. போதும். அத்தை பேச்சைக் கேட்டு ஆட்ற வழக்கத்தை இன்னியோடு விட்டுடு!"

விர்ரென்று சீதாவின் அறையினுள் நுழைந்து விட்டான் பானு.

குளிர் தென்றலின் வருகையை உணர்வது போல் சீதா மெய் சிலிர்த்தாள். இதழ்கள் துடிக்க, கண்கள் கலங்க, மெலிந்த கைகளை மட்டுமே அவன் முன் நீட்டினாள் அவள். தாய்ப் பறவையின் இளஞ் சூட்டில் குளிர் காயும் குஞ்சாகப் பானுவின் பரந்த மார்பில் சீதாவின் முகம் புதைந்து விட்டது.

மறு பிறவி எடுத்ததன் பயனை அவள் தெரிந்து கொண்டாள்.

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

பொது ஜனங்களின் ரேடியோ... விலையுயர்ந்த ஸெட்களின் விசேஷ
அம்சங்களுடன் மதிப்பரிய ரேடியோ

# புதிய நேஷனல் எக்கோ

# ஜனதா

நீங்களும் பெறலாம்! ரூ. 125/– தான்! வரிகள் தனி

நீங்கள் எதிர்பார்த்துக் காத்திருந்த ரேடியோ இதோ!—நேஷனல் எக்கோவின் 'புதிய ஜனதா' ... மிகக் குறைந்த விலையில் பெரிய ஸெட்களின் சிறப்பு அம்சங்கள் கொண்டது! 'ஜனதா' வின் பராமரிப்புச் செலவும் மிக மிகச் சொற்பம்தான்—

உங்கள் நேஷனல் எக்கோ வியாபாரியை இலவசமாக இயக்கிக் காட்டச் சொல்லுங்கள். உங்கள் ஸெட்டுக்கு இன்றே அவரிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்.

மாடல் U-756: ஏஸி / டி.ஸி. 2 பாண்டுகள், ஷார்ட் வேவ் மற்றும் மீடியம் வேவ். 5" 'ஹை ப்ளக்ஸ்' லவுட்ஸ்பீக்கர். இதுவரை விலையுயர்ந்த ஸெட்களில் மட்டுமே இருந்துவந்த சிறப்பு அம்சங்கள் கொண்டது. அழகிய கரும்சிவப்பு பிளாஸ்டிக் பெட்டி. மான்ஸலினாஸ்டு. ஒரு முழு வருஷ உத்தரவாதம்.

GRA ஜெனரல் ரேடியோ
& அப்ளையன்ஸஸ் லிட்.

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி
பாட்னா . பெங்களூர் . ஸெகந்திராபாத்




JWT-GRA 2020 (A)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




புதுமலர்ச்சி, புதுமலர்ச்சி என்று 'ஆடுவோமே,
ள்ளுப் பாடுவோமே,' ஆனந்தமாய் லைப்பாய் தேய்த்து நீராடுவோமே!
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய் சோப்!
தம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது
லைப்பாய் நல்லுறவு ... 'எல்லாம் இன்பமயம்!'

**லைப்பாய் இருக்குமிடம், அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!**

L.33-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு